# இவர்தான் ஜானகி

மாண்பு மிக்க மனைவி • அன்பு மிக்க அன்னை • தெம்போடு விளங்கும் இல்லத்தரசி



# "எது 'அதுவோ' அதேதான் எனக்கு வேணும்."

ஜானகிக்கு வீட்டுவேலை அதிகம். ஆகவே தினமும் ''ஹார்லிக்ஸ்'' அருந்துகிறார். அதன் ஊட்டச் சத்தும், புரதமும், அவருக்கு நாள் முழுவதும் உறுதுணையாய் அமைகின்றன. தூய்மையான ஆடை நிறைந்த பால், செழுமையான கோதுமை மற்றும் இதர ஊட்டச்சத்துக்கள் நிறைந்த ''ஹார்லிக்ஸை'' 80 ஆண்டுகளுக்கும் மேலாக, டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள். உடல்நலத்தோடும், தெம்போடும் திகழ நீங்களும், உங்கள் குடும்பத்தாரும் நாள்தோறும் ''ஹார்லிக்ஸ்'' அருந்துங்கள்.




## 'ஹார்லிக்ஸ்' – ஆம் அதேதான்!

''ஹார்லிக்ஸ்'' என்ற பெயர் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க் ஆகும்

HL-1845.A

# கல்கி பொருளடக்கம்



சாதாரண, மாசி 2 * பிப்ரவரி 14, 1971



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் : | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 30



இதழ் 29

# அபாயம் நெருங்கிவிட்டது, உஷார்!

எப்பாடு பட்டாவது தமக்குப் பலம் தேடிக் கொள்ள வேண்டும் என்ற ஒரே கருத்தில் பிரதமரவர்கள் தி. மு. க. வுக்கு அடியோடு விட்டுக் கொடுத்துத் தேர்தல் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார். இந்திய அரசியலில் தமக்குத் தான் முதல் ஸ்தானம் என்று பாத்தியதை பாராட்டும் ஒரு கட்சி, தமிழகம் முழுவதிலும் சட்டசபையில் ஒரு ஸ்தானத்துக்குக் கூடப் போட்டியிடாமல் உரிமையை விட்டுக் கொடுத்திருப்பது பற்றிப் பிரதமரின் கட்சிக்காரர்களுக்கே அத்யாச்சரியமாகத்தான் இருக்கும். தமிழகத்தில் பழைய காங்கிரஸிலிருந்து விலகி இந்திரா கட்சியில் சேர்ந்த அனைவருக்கும், தீவிரச் செயல் திட்டங்களை நிறைவேற்றப் புதிய காங்கிரஸ் அற்புதப் பணி புரியும் என்று நினைத்து வந்திருக்கும் உற்சாகமுள்ள இளைஞருக்கும் இப்போது மனக் கசப்பு ஏற்பட்டிருப்பதில் வியப்பு இல்லை. பத்து பார்லிமென்ட் ஸ்தானங்களுக்குத் தி. மு. க. ஆதரவைப் பெறுவது என்ற அற்ப விலைக்காகத் தங்களை இப்படிப் பிரதமர் 'விற்று' விட்டது குறித்து அவர்கள் கொதிப்புறுவது இயல்பே. இப்போது தமிழகத்தின் புது காங்கிரஸார் அடுத்த ஐந்தாண்டுகளுக்கு வாய் மூடி மௌனிகளாக இருக்க வேண்டும்; அல்லது தி. மு. க. மீண்டும் பதவிக்கு வர நேரிட்டால் அக்கட்சியின் காரியங்களுக்குச் சமாதானம் சொல்பவர்களாக இருக்க வேண்டும் — இதுதான் இப்போது அவர்களுக்கு ஏற்பட்டுள்ள ஜீவனற்ற நிலை. எனவே இப்போது புது காங்கிரஸார் மனோ தைரியம் பெற்றுப் பழைய காங்கிரஸுக்கே திரும்ப வேண்டும் என எதிர்பார்க்கலாம். அவர்கள் அவ்வாறு செய்தால் ஸ்ரீ காமராஜூம் அவரது சகாக்களும் அவர்களை வரவேற்று, அவர்களது பழைய சேவைகளையும் தியாகங்களையும் முன்னிட்டும், அவர்களது இன்றைய உற்சாகத்தை முன்னிட்டும் அவர்களை வரவேற்பார் என நம்பலாம்.

புது காங்கிரஸ் தலைமையினர் வெறும் உணர்ச்சி வேகத்தின் பேரில் இப்படிச் செய்துவிட்டதாக நான் நினைக்கவில்லை. நன்கு யோசித்து, கணக்கிட்டுச் செய்த ராஜதந்திரமே இது. ஸ்ரீமதி இந்திரா காந்தியைப் பொறுத்தமட்டில், இப்போது அவர் ஆட்சிபீடத்தை மீண்டும் பெறுவிடில், பிறகு ஒருகாலும் பெற முடியாது. அவருக்கு ஆட்சி பீடத்தில் அமராமல், எதிர்க் கட்சித் தலைவராக இருப்பதற்குத் தேவைப்படும் மனப்போக்கோ, பொறுமையோ கிடையாது. ஒன்று அவர் பிரதமராக நீடித்தாக வேண்டும்; அல்லது அரசியல் அரங்கிலிருந்தே விலகிவிட வேண்டும் — இதுதான் அவரது சிந்தனைப் போக்கு. ஆனபடியால்தான், அவர் கட்சியின் நீண்ட எதிர்காலத்தைப் பற்றிச் சிறிதும் கவலைகொள்ளவில்லை. வரவிருக்கும் தேர்தலில் வெற்றி பெறுவதிலேயே அவருக்குக் கண்.

இந்திய அரசியலில் தாம் பிரதானமாக விளங்குவதற்கு இரண்டு விதத்தில் ஸ்ரீமதி இந்திரா காந்தி ஆயத்தம் செய்துகொள்வதாக எண்ணுகிறேன். மத்திய சர்க்கார் ஸ்திரத்தன்மை வாய்ந்ததாக இருக்க வேண்டுமாயின் தமது கட்சிக்குப் பார்லிமெண்டில் உறுதியான பெரும்பான்மை வேண்டும் என்று அவர் திரும்பத் திரும்பக் கூறி வருகிறார். அவரது கணக்குப்படி இந்தப் பெரும்பான்மையைப் பெறத் தமிழகத்தில் தமக்குப் பத்து ஸ்தானங்கள் வேண்டும். அதற்காகத் தமிழக புது காங்கிரஸ் ஸ்தாபனத்தை தி. மு. க.விடம் பணயம் வைத்து விட்டார். ஸ்ரீமதி இந்திராவுக்குப் பெரும்பான்மை பலம் கிடைத்து விட்டால் அவர் அடுத்த ஐந்தாண்டுகளுக்கு இந்தியாவின் சர்வாதிகாரியாகவே இருப்பார் என்பதில் ஐயமில்லை. இவ்விதம் சர்வாதிபத்தியம் செலுத்த அரசியல் சாஸனம் இடம் தராது என்றும், சாஸனத்தை மாற்றினாலே சர்வாதிகார சக்தி பெற முடியும் என்றும் யாரும் எண்ண வேண்டாம். 'நெருக்கடி

நிலைமை' என்ற பெயரில், பெரும்பான்மை பெற்ற ஒருவர் சர்வாதிபத்தியம் செலுத்த மிக எளிதாக இடம் தருகிறது சாஸனத்தின் பதினெட்டாவது பிரிவு. இது துர்ப்பாக்கிய வசமான உண்மை.

இப்போதும் சாஸனத்தின் 352வது பிரிவைக் காட்டி நெருக்கடிப் பிரகடனம் செய்வதற்குக் காரணம் கற்பிக்க முடியும். வங்காளத்தில் நக்ஸலைட் அபாயம், காச்மீரத்தின் துர்ப்பாக்கியமான நடவடிக்கைகள், இந்திய விமானத்தை வழிமறித்து ஹை-ஜாக் செய்தவர்களுக்குப் பாகிஸ்தான் சர்க்கார் வரவேற்புத் தந்திருப்பது — இவற்றைக் காட்டியே நிச்சயமாக நெருக்கடிப் பிரகடனம் செய்து விடலாம். அவ்விதம் செய்தவுடன், ராஷ்டிரபதி உத்தரவின்கீழ் அடிப்படை உரிமைகள் தாற்காலிகமாக ரத்தாகும். ராஜ்யங்களின் சுயாதிகார உரிமைகள் வாபஸ் பெறப்படும். அடிப்படை உரிமைகளை அமல் செய்வதிலிருந்து ஸுப்ரீம் கோர்ட்டும் தடுக்கப்படும். எனவே, பிரதமரின் கட்சிக்கு பார்லிமெண்டில் பெரும்பான்மை ஸ்தானம் கிடைத்துவிடில் சாஸனத்தின் ஷரத்துக்குட்பட்டே, அவர் விரும்பிய எதையும் சாதித்து விடலாம். அவர் செய்யும் காரியங்கள் தேசத்தின் எதிர் காலத்தை அபாயகரமாகப் பாதிக்கலாம்.

இந்திராவின் பாட்டனுர் மோதிலால் ஒரு மாமனிதர். தந்தை ஜவாஹர்லால் நேருவோ மோதிலால் நேருவைவிட மா மகா மனிதராக இருந்து வந்தார். இவர்களைவிடத் தாம் இன்னும் மகா மகாப் பெரியவராகக் கருதப்பட வேண்டும் என்று இந்திரா காந்தி விரும்பி அதற்காகவே பிரதமர் பதவியை நாடுவதாக இருக்கலாம். ஆசைவயப்பட்ட அரசியல் வாதிகளிடையே இது சாமானியமாகக் காணக் கூடியதே. ஆயினும் இது அவர்களுடைய அபாயகரமான குறைபாடாகும்.

இந்திராவின் கட்சி தனிப்பட்ட பெரும்பான்மை பெற்று அவர் தன்னிஷ்டப்படி நடந்தாலும் சரி, அல்லது இடதுசாரியினரின் ஆதரவுடன் அவர் பதவி வகிப்பதற்குரிய பலத்தைப் பெற்று அவர்களது தீவிரத் திட்டங்களை அமல் செய்தாலும் சரி, — தேசத்துக்கு மகத்தான அபாயம், எண்ணிப் பார்க்கவொண்ணுத அபாயம் ஏற்படும். எனவே இச்சமயத்தில் தேசப் பற்றுள்ள ஒவ்வோர் இந்தியனின் கவனமும் சுய விஷயங்களிலோ கட்சி விஷயங்களிலோ செல்லக் கூடாது. பொருளாதாரம் நொறுங்கி விழுந்து, பணத்தின் மதிப்பு மேலும் குறைந்தால், அதனுல் கஷ்டப் படப்போவது பணக்காரர்கள் அல்ல. ஏழை விவசாயியும், நகர்ப்புறத் தொழிலாளரும் தான் அவதிக்கு ஆளாவர். இத்தருணத்தில் ஜனநாயகத்தையும் தேசப் பொருளாதாரத்தையும் காக்க மகத்தான முயற்சி தேவை. பிற்பாடு மக்கள், 'எங்களுக்கு யாரும் உண்மையை எடுத்துச் சொல்லவில்லையே' என்று வருத்தப்படுவதற்கு இடம் தரலாகாது. இப்போதே கல்வியறிவு பெற்ற இந்தியன் ஒவ்வொருவனும் மக்களுக்கு இத் தேர்தலில் உட்கிடையாக உள்ள பிரம்மாண்டப் பிரச்னைகளை விளக்கிக் கூறி, உண்மைகளை உணர்த்தி, அவர்களுடைய வாக்கின் விளைவுகளைப் பற்றி எச்சரிக்க வேண்டும்.

ஸ்ரீமதி இந்திரா இல்லாவிடில், வேறு யார் பிரதமராக வர முடியும் என்பது பற்றி யாருமே கவலைப்பட வேண்டியதில்லை. கௌரவம், நேர்மை ஆகிய குணங்கள் கொண்ட எவரும், சாமானிய அறிவுச் சக்தி படைத்தவராயிருந்தாலும் போதும் — பிரதமராக நல்ல முறையில் பணியாற்ற முடியும்.

**[திரு க. சந்தானம் ''ஸ்வராஜ்யா''வில் எழுதியதின் சாராம்சம்.]**

# மானக்கேடு

சமீபத்தில் சேலத்தில் நடைபெற்ற மூட நம்பிக்கை ஒழிப்பு மகாநாடு தமிழர் பண்பாட்டுக்கே மகத்தான களங்கம் விளைவித்து விட்டது. நாகரிக சமுதாயம் வெட்கித் தலை குனியும்படியான இழிமுறையில் இம்மகாநாடு நடத்தப்பட்டிருக்கிறது. பண்பறிந்த உலக மாந்தர் அனைவரும் ஒப்புக் கொண்டுள்ள கௌரவம் கண்ணியம் முதலியவற்றைப் புறக்கணித்துவிட்டு ஆஸ்திகர்களின் உள்ளங்களைப் புண்ணுக நோகச் செய்து மகாநாடு நடத்தியிருக்கிருர் திரு ஈ. வே. ரா. அவர்கள். தமிழ் நாட்டைத் தவிர வேறெங்கேனும் இவ்வளவு அநாகரிகமாகத் தெய்வ நிந்தனையைப் பகிரங்கப்படுத்த முடியுமா என இதர ராஜ்யத்தவர்கள் கேட்கும்போது நாம் கூசிக் குறுக வேண்டியிருக்கிறது.

பண்பறிந்த உலகு அனைத்தும் இம் மாநாடு குறித்துக் கண்டனம் தெரிவித்துள்ள போது, தமிழக ஆட்சி பீடத்தில் உள்ள தி.மு.க.வினர் மட்டும் இந்தக் கண்டனத்தில் சேராதது குறிப்பிடத்தக்கது. முதன் மந்திரி அவர்கள் இன்னமும் (பிப். 6உ வரை) மகாநாடு பற்றிய போலீஸ் அறிக்கையைப் பெற முயலுவதோடு நிற்கிருர். மகாநாட்டுக்கு முன்பே, அதன் அங்கமாக நடக்க விருந்த அசம்பாவித ஊர்வலம் பற்றிப் போலீஸாருக்குத் தகவல் கொடுத்து அதைத் தடுக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்ததாகக் கூறப்படுகிறது. இது குறித்துப் போலீசார் ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்பதற்குத் திட்டவட்டமான பதில் ஏதும் காணும்.

கற்பு பற்றிய தீர்மானம் திரு ஈ. வே.ரா. வின் புரட்சிக் கருத்துக்களில் ஒன்று என்பதற்கு மேல் தமிழக முதல்வர் எதுவும் சொல்லக்காணும். தெய்வமூர்த்தங்களுக்கு இழைக்கப்பட்ட அபசாரத்தைப் பற்றிக் கேட்டால், சென்ற தேர்தலுக்கு முன் கும்பகோணத்தில் நடந்த ஓர் அசம்பாவிதத்தை மேற்கோள் காட்டி, 'அப்போது காங்கிரஸ் ஆட்சி என்ன செய்தது?' என்று திருப்பிக் கேட்கிருர். அன்று காங்கிரஸ் செய்த தவறுகளையே தாங்களும் செய்வதற்குத்தான் தி.மு.க. ஆட்சிப் பட்டா கேட்கிறதா, என்ன? மேலும், கும்பகோண

அசம்பாவிதம் குறித்து அன்றைய ஆட்சியாளர் மெத்தனமாக இருந்தது வாக்காளர்களை எந்த அளவுக்குப் புண்படுத்தி யிருந்தது என்பதற்கு அந்தத் தேர்தல் முடிவிலேயே சான்று காண முடிந்தது. அதேபோல் இந்தத் தேர்தலிலும் மக்கள் கண்டனத்தை வோட்டுப் பெட்டியில் பார்க்கத்தான் தி. மு. க. விரும்புகிறதென்றால் சரிதான்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தமிழக முதன்மந்திரி திரு கருணாநிதி சாதுரியசாலி. ஸ்ரீமதி இந்திரா காந்தியின் கட்சி தேர்தலில் படுதோல்வி காணும் என்பது திரு கருணாநிதிக்கு சர்வ நிச்சயம். தமிழக சட்டசபைத் தேர்தல் போட்டியில் அக்கட்சிக்கு ஸ்தானம் தர அவர் அடியோடு மறுத்திருப்பதில் தமது இந்த ஹேஷ்யத்தையே வெளிக்காட்டி யிருக்கிறார். தமிழ் நாட்டில் இந்திரா காங்கிரஸ் தனது பலவீனத்தை அம்பலப்படுத்திக்கொண்டு, அதனால் இங்கு தி. மு. க.வின் எதிர்காலத்தையும் மோசமாக்கி விடக் கூடாது என்பது திரு கருணாநிதியின் விருப்பம். எனவே இந்தக் கோணத்தில் அவர் சட்டசபைத் தேர்தலில் புதிய காங்கிரஸ் குளறுபடி செய்வதை உறுதியோடு மறுத்திருப்பது புத்திசாலித்தனமே யாகும்.

இந்தியாவில் எங்குமே இந்திரா கட்சிக்கு மக்கள் ஆதரவு இல்லை. இடைத் தேர்தல் நிரூபிக்கப் போகும் பல உண்மைகளில் ஒன்று, பண பலமும் அதிகார பலமும் கொண்டிருப்பதால் மட்டும் ஒரு கட்சி வெற்றி பெற்றுவிட முடியாது என்பதாகும். இந்திரா கட்சிக்குச் சட்டத்தைக் காத்து நல்லாட்சி வழங்கும் திறமை இருப்பதாக மக்கள் சிறிதும் நம்பவில்லை. அக்கட்சி கம்யூனிஸ்டுகளுடன் கொண்டுள்ள உறவை ஜனநாயக - சுதந்திரப் பிரியர்கள் அனைவருமே வெறுக்கிறார்கள்.

★

ஸ்ரீமதி இந்திரா காந்தியாலும் அவரது கம்யூனிஸ்ட் கூட்டணியாலும் ஒரு பெரிய நெருக்கடி நிலை உருவாகி விட்டது. இதைச் சமாளிப்பதற்காக, ஜனநாயகத்தில் பற்றுக் கொண்டு யதேச்சாதிகாரத்தை எதிர்க்க ஒரு முன்னணியை அமைப்பதற்கு எதிர்க் கட்சித் தலைவர்கள் முயற்சி எடுத்தார்கள். இந்த முயற்சி பரிபூரணமாக வெற்றி பெறவில்லை. இருப்பினும் நான் நம்பிக்கை இழக்கவில்லை. எதிர்க் கட்சிகள் ஒன்றுபட வேண்டும் என்ற என் ஆசையை நான் விடவில்லை. இப்போதுள்ள நிலையில் குறைந்தபட்சமாக, முன்னணிக் கட்சிகள் தம்மிடையே உள்ள மாறுபாடுகளைப் பற்றி மிகைபடச் சிந்திப்பதைத் தவிர்க்கவேண்டும். இந்த சிந்தனைப் போக்குத்தான் அனைவரும் சக்தி வாய்ந்த முறையில் கூடி உழைப்பதற்குத் தடையாக உள்ளது.

அரசாங்கத்தின் அதிகாரம் ஓங்க ஓங்க மக்களின் சுதந்திரம் குறைந்து அவர்கள் அடிமை நிலைக்கே வருவார்கள் என்பது சுதந்திரக் கட்சியின் முடிவான கருத்து. எனவே எல்லாத் துறைகளிலும் அரசாங்கத்துக்கு உள்ள ஆதிக்கம் பெருகுவதைக் கட்டுப்படுத்தவேண்டும் என்று சுதந்திரக் கட்சி கூறுகிறது.

சர்க்காருக்கு அதிகாரங்களை ஏகத்தாறுக வழங்குவதில் உள்ள ஆபத்தைக் கணிப்பதில் ஜனநாயக முன்னணிக் கட்சிகளிடையே சிறிது மாறுபாடு உள்ளது. இது பற்றி மதிப்பீடு செய்வதில் முன்னணிக் கட்சிகளிடை இருக்கக் கூடிய மாறுபாடுகளைப் பரஸ்பரம் பொறுத்துக் கொண்டுதான் செயலாற்ற வேண்டும்.

தேச பிதா காந்தியடிகள் அரசாங்கத்தின் அதிகாரம் பெருகுவதைச் சிறிதும் விரும்பவில்லை. ஏனெனில் அரசாங்கம் என்ற பெயரில் உண்மையில் அதிகாரத்தை வசமாக்கிக் கொண்டு பிரயோகிப்பவர் யார் என்று அவர் உணர்ந்திருந்தார். ஆட்சியதிகாரத்தைப் பெற்ற ஸ்ரீமதி இந்திரா காந்தியின் தர்பாரைப் பார்த்து விட்டோம். இதுவே நமக்குப் போதும். சர்க்காரின் ஆதிக்கத்தை விஸ்தரிக்கும் பிரச்னை குறித்து வேறு விளக்கம் வேண்டாம்.

★

சோஷலிஸம் என்று வழங்கும் சித்தாந்தத்தில் இரண்டு அங்கங்கள் உண்டு. ஒன்று, மக்களை அரசாங்க ஆதிக்கத்தின் கீழ் மிகவும் கட்டுப்படுத்துவது. இது நல்லதல்ல. மற்ற அம்சம் வசதியுள்ளவர்களுக்கு நல்லறிவு புகட்டுவது; தங்களுக்கும் பின்தங்கியவர்களுக்கும் உள்ள ஐக்கியத்தை அவர்கள் உணருமாறு செய்வது. இது நல்ல அம்சமாகும். இவ்விரு அம்சங்களையும் உள்ளபடி புரிந்து கொண்டாலே நல்லாட்சியும் திறமையுள்ள ஜனநாயக வாழ்வும் ஏற்படும்.

★

அரசியல்வாதிகள் இப்போது உத்தியோகஸ்தர்களையும் தங்களது கைப்பாவைகளாக்கிக்கொள்ள முயன்று வருகிறார்கள். மைசூர் கவர்னர் ஸ்ரீ தர்மவீரா, இந்தியா சுதந்திரம் அடைந்த பின் அரசாங்க அதிகாரிகள் தங்களது சுதந்திர உரிமைகளை விட்டுக்கொடுக்கும் போக்கு வளர்ந்து வருவது பற்றி வருத்தம் தெரிவித்துப் பேசியுள்ளார். ''ஜனநாயக ஆட்சிக்குத் தாங்கள் ஆற்ற வேண்டிய கடமையைக் காட்டிலும், தங்களுடைய சுயநல

**புது தில்லி சங்கீத நாடக அகாதெமி பரிசு**

ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரி, வீணை துரைசாமி ஐயங்கார்,
ஸ்ரீமதி மிருணாளினி சாராபாய்.

மும், தாற்காலிக லாபமுமே அவர்களுக்கு (அதிகாரிகளுக்கு)ப் பெரிதாகி விட்டது. எனவே இன்று நாம் அதிகாரத்துக்காகப் பறக்கும் அரசியல் வாதிகளுக்கும், அவர்களுக்கு இச்சகம் பாடும் அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கும் ஈடு கொடுக்க வேண்டியிருக்கிறது'' என்கிறார் அவர்.

இதற்கெல்லாம் காரணம் சர்க்காருக்கு எல்லாத் துறைகளிலும் வழங்கப்பட்டுள்ள ஆதிக்கம்தான். எனவே மக்களின் தனி வாழ்வு, பொருளாதாரம் இவற்றின் மீது அரசாங்கத்துக்கு உள்ள அதிகாரத்தை அதம பட்சமாகக் குறைக்க வேண்டியதும், மக்களுக்கு அதிகபட்ச சுதந்திரம் தரவேண்டியதும் அத்தியாவசியம் என்று மிருந்த ஆலோசனையின்மீது கருதுகிறேன். நிரந்தரமாக உத்தியோகம் வகிக்கும் அதிகாரிகள், இந்திய சுதந்திரத்துக்குப் பின் தங்கள் சுதந்திரம் போயே போய்விட்டது என்று முடிவு கட்ட வேண்டாம். எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும், அதனால் பாதிக்கப்படாமல் அவ்வப்போது தேச நலனை யொட்டி அதிகாரிகள் மந்திரிமார்களுக்கு அழுத்தமாக ஆலோசனை கூற வேண்டும்.

சர்க்காரின் அதிகாரத்தைக் குறைப்பது, நிரந்தர உத்தியோகஸ்தர்கள் சுதந்திரமாகச் செயலாற்றுவது ஆகிய இவ்விரு விஷயங்களை நாம் மனத்தில் முக்கியமாகக் கொண்டாலே நல்லாட்சி கிடைக்கும்.

★

தேச நலனை உத்தேசித்தாம் மேற்கு வங்காளத்தில் நடக்கும் கம்யூனிஸ்ட் வன்முறைகளையும், அச்சுறுத்தல்களையும் நிறுத்துவதற்கு வழி காண்பதே முதல் முக்கியத்வம் பெற வேண்டிய விஷயம். இச்சமயத்தில் எந்த அறிவுள்ள நிர்வாக பீடத்தினரோ, அரசியல் வாதியோ இடைக்காலத் தேர்தலை முக்கியத்வம் வாய்ந்த விஷயமாக ஆக்கியிருக்க மாட்டார். பிரதமர் தாம் மேற்கொண்டுள்ள தவறான கொள்கைகளைப் பின்பற்றுவதற்கு அநுகூலமாக அரசியல் சாஸனத்தை மாற்ற எண்ணி, அதற்காகவே தேர்தலை உண்டாக்கி அதை நாட்டின் அதி முக்கிய விஷயமாக்கியுள்ளார். இச்சமயத்தில் எந்தப் பிரச்னைக்குச் சர்க்கார் நியாயமாக முதலிடம் தந்திருக்க வேண்டுமென்று எடுத்துக் காட்டி வலியுறுத்தி யிருக்க வேண்டியது புது தில்லி சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பொறுப்பாகும். இதனை 'ஆற்றத் தவறி விட்டனர். சர்க்கார் அதிகாரிகள் சுதந்திரமாகச் செயலாற்றுவதில்லை என்று மைசூர் கவர்னர் ஸ்ரீ தர்மவீரா கூறியிருப்பதற்கு இது ஒரு சரியான எடுத்துக்காட்டாகும்.

வங்கத்தில் எப்படிப்பட்ட நிலை ஏற்பட்டுள்ளது என்பது யாவரும் அறிந்ததே.

அங்கு இப்போது நிலவும் சூழலில் நடக்கும் தேர்தலைச் சுதந்திரத் தேர்தல் என்று சொல்வதே பொருந்தாது. இப்படிப்பட்ட தேர்தலில் உண்மையே இல்லை. அது நாடகம்தான். இதனால் எந்த நோக்கமும் நிறைவேறாது.

வங்காள உதாரணத்தைப் பின்புலனாகக் கொண்டு பார்க்குமிடத்து, மற்றப் பகுதிகளில் தேர்தல் எப்படி நடக்கும் என்பது பற்றியும் நிச்சயமாக எதுவும் சொல்வதற்கில்லை.

இத்தனை குழப்பங்கள் போதாதென்று, இந்திராவின் கட்சிக்குச் சாதகமாக மக்களை இழுக்கும் விதத்தில் சமயச் சின்னம் ஒன்றை அக்கட்சி தனது தேர்தல் அடையாளமாகப் பெற்று விட்டது. இந்த அநீதத்தைத் தவிர்ப்பதற்கு நடவடிக்கை எடுக்கவும் அவகாசம் இல்லாத நிலையில் இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது. தேர்தல் கமிஷனர் முடிவு செய்து விட்டார் என்பதால் இது சட்டபூர்வமாக முடிவாகி விட்டதென்று சொல்வதற்கில்லை. பின்னால் இந்தத் தேர்தலே இதனால் செல்லாது என்று தீர்ப்பு வழங்கப்படலாம்.

ஒரு தவற்றைத் திருத்துவதற்கு எப்போதுமே காலம் கடந்துவிடவில்லை. ஏராளமான பொருட் செலவு செய்து நடத்தும் இந்த லட்சியமற்ற தமாஷாவை நிறுத்துவதற்குக் காலம் கடந்துவிடவில்லை. அத்தியாவசிய நிர்வாக இனங்களிலிருந்து சக்தியைத் திசை திருப்பி, தேசத்துக்கு எந்த நன்மையு மற்ற தேர்தலை நடத்த அவசியம் இல்லை.



# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி ✤ தமிழாக்கம்: —ராஜாஜி—

## 63

ஹிம்ஸையை நாம் வழக்கப்படுத்திக் கொண்டுவிட்டபடியினால் கொலை என்பது வெகு எளிதாகிவிட்டது. சிறு காரணங்களுக்கெல்லாம் பிற உயிர்களைக் கொல்கிறோம். மக்களுமே ஒருவரையொருவர் கொல்லத் தயங்குவதில்லை. உண்மையில் நாம் தெய்வபக்தி கொண்டிருந்தால், அன்பும் அருளுமே அவன் வடிவம் என்று ஆண்டவனை நாம் நம்பினோமானால், இப்படி ஜீவஹிம்ஸை செய்வோமா? நடுங்க மாட்டோமா? உயிருக்குப் பயந்து விஷ ஜந்துக்களையும் பாம்புகளையும் பூச்சிகளையும் கொல்கிறோம். நானுமே இவ்வாறு செய்கிறேன். ஆயினும் எனக்கு அறிவும் தைரியமும் அருள வேண்டும் என்று இடைவிடாமல் ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன். உயிர்களை மாய்க்கும் அவசியமில்லாமல் வாழும் திறமையை அடைய வேண்டும் என்று இடைவிடாமல் இறைஞ்சுகிறேன். ஆண்டவனிடம் நான் கோரும் அருளை, மற்ற உயிர்களிடம் நான் காட்டும் சக்தியை அடைய வேண்டுமென்று எப்போதும் பிரார்த்தித்து வருகிறேன். (ஹரிஜன், 9-1-37)

உயிர்களுக்குள் பரிசுத்தமான பிராணி பால் தரும் பசு, எல்லா உயிர்களுக்குமாகச் சேர்ந்து மனிதனை இறைஞ்சுகிறது, ''நம்மைக் கொல்ல வேண்டாம்'' என்று. ''உயிர்களுக்குள் சிறந்த வடிவம் எடுத்திருக்கிறாய், மனிதனே! நமக்கு அருள்வாய். கொல்லாதே'' என்று எல்லாப் பிராணிகளுக்குமாகப் பசு நம்மைப் பார்த்துக் கேட்டுக் கொள்கிறது. இவ்வாறு கெஞ்சுவதை அதன் கண்களில் காணலாம். ''நம்மைக் கொல்லவா நீ பிறந்தாய்? நம் ஊனைத் தின்று பிழைக்கவா ஆண்டவன் உன்னைப் படைத்தான்? எங்களுக்கு நண்பனாக இருக்க மாட்டாயா? எங்களுக்குக் காப்பாக இருக்க மாட்டாயா?'' என்று தன் கண்கள் வழியாய்ப் பசு நம்மிடம் மன்றாடுகிறது.

(யங் இந்தியா, 26-6-24)

கருணாமூர்த்தியான பசுவை நான் பூஜை செய்வதை விடமாட்டேன். உலகமெல்லாம் எதிர்த்தாலும் அது பூஜைக்கு உரியது என்று உறுதியாகச் சொல்வேன்.

(யங் இந்தியா, 1-1-25)













**பத்ம விபூஷண்:**

1. ஸ்ரீ உதய சங்கர்
2. உஸ்தாத் அலாவுதீன்கான்

**பத்ம பூஷண் :**

1. திரு என். ராமசாமி ஐயர்
2. முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர்
3. நாமக்கல் திரு வெ. ராமலிங்கம் பிள்ளை
4. திரு காளிந்தி சரண் பாணிகிராஹி
5. ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள்
6. ஸ்ரீ பாலக்காடு மணி அய்யர்
7. திரு ஆர். கே. லக்ஷ்மண்
8. பேராசிரியர் திரு சாம்பமூர்த்தி
9. திரு ராஜ்கபூர்

**பத்ம ஸ்ரீ:**

1. திரு கொத்தமங்கலம் சுப்பு
2. திரு வெங்கடசாமி நாயுடு
3. ஸ்ரீ டி. கே. சண்முகம்
4. ஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யர்
5. திரு பால முரளி கிருஷ்ண
6. திரு எஸ். பரமானந்தன்
7. திரு தண்டாயுதபாணி பிள்ளை
8. டாக்டர் எஸ். கிருஷ்ணமூர்த்தி
9. டாக்டர் எஸ். நாயுடிம்மா

விருது பெற்ற வித்தகர்கள் அனைவருக்கும் நம் நல்வாழ்த்துக்கள். கல்கி நேயர்களின் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.







# அகாதெமி பரிசுபெறும் 'அன்பளிப்பு'

அட்சர லட்சம் பெறும் என்பார்களே, அது ஒருவேளை மிகைப்படுத்திக் கூறுவதாக இருக்கலாம். ஆனால் கு. அழகிரிசாமி அவர்கள் எழுதிய ''அன்பளிப்பு'' என்ற ஒரு சிறுகதையே சாகித்ய அகாதெமி பரிசு பெறத் தகுதியுடையதுதான் என்று சொன்னால் அதில் இம்மியளவும் மிகைப்படுத்தல் என்பது கிடையாது. ஆக, ''அன்பளிப்''பை உள்ளடக்கிய சிறுகதைத் தொகுப்பு நூல் இப்பரிசைப் பெற்றதில் வியப்பில்லை.

அழகை ரசிக்கத் தெரிந்த அழகிரிசாமி அதனைக் கண்ணுக் கெட்டிய தூரம் விரிந்து பரந்து கிடக்கும் வயல் பரப்பு, அலைகடல், வானம் ஆகியவற்றிலும் கண்டார்; பட்டணத்தின் சந்து பொந்துகளிலும் தேடிக் கண்டுபிடித்தார். இன்னும் கண்ணுக்குப் புலனாகாத மனித உள்ளங்களிலும் அழகை எப்படியோ ஊடுருவிப் பார்த்து ரசித்து நமக்கும் சொன்னார்.

அழகிரிசாமி வாழ்க்கையைத் தாம் எதிர்த்து நின்றது போலவே வாசகர்களையும் வாழ்க்கையைச் சந்திக்க வைக்கிறார். இது தான் உன்வாழ்க்கை. இதுதான் நீ வாழும் சூழ்நிலை. இதில் முன்னேற்றம் காணமுடியுமா, முயன்று பார்; ஆனால் தப்பி ஓட நினைக்காதே. அது நடக்காத காரியம் என்று உணர்த்துகிறார். இத் தொகுதியில் அடங்கியிருக்கும் ''தேவ ஜீவனம்'' அப்படிப்பட்ட ஒரு கதை தான். பட்டண வாழ்க்கையைக் கிண்டல் செய்வதில் அழகிரிசாமிக்கு அலாதி ருசி! அதை நாமும் சுவைக்கிறோம் அவர் எழுத்தில்.

அவருடைய கிண்டலைப் படித்து யாரும் வயிறு குலுங்கச் சிரிக்க முடியாது; அவருடைய சோகக் கதை யாருடைய இதயத்தையும் முறுக்கிப் பிழிந்து, கண்ணீரைத் தாரை தாரையாகப் பெருக்கச் செய்யாது. அதிக பட்சம் ஒரு புன்னகை உருவாகும்; கண்களில் நீர் பனிக்கும் அவ்வளவுதான். ஆனால் அந்தப் புன்னகையின் பின்னால் 'நன்றாய்ச் சொன்னார்' என்ற மனநிறைவும் நீர்த் திரையிட்ட கண்களுக்குப் பின்னால் ''ஐயோ பாவம்!'' என்ற நெஞ்ச நெகிழ்வும் ஏற்படுகிறதே, அவற்றைப் பிழியப் பிழிய அழ வைக்கும் கதையிலும் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைக்கும் கதையிலும் நாம் காண்பதில்லையே ஏன்? அதுதான் அழகிரிசாமியின் வெற்றி! அகாதெமி பரிசும் இதற்காகத்தான்.



'அன்பளிப்பு' என்ற முதல் சிறுகதை குழந்தைகளின் உள்ளங்களை எத்தனை நுட்பமாக நமக்குக் காட்டுகிறது! ''குழந்தைகளுக்கென்ன கவலையா, பிரச்னையா? அதுகள் பாட்டுக்கு 'ஜாலி'யாக இருக்கின்றன'' என்று நாம் சாதாரணமாக நினைப்பது எவ்வளவு பெரிய தவறு? குழந்தைகளின் இதயங்களில் எத்தனை விதமான பிரச்னைகள், கவலைகள், சிக்கல்கள்! பெரியவர்களைப் போல் அவற்றை மனம் விட்டு விவாதிக்கக்கூட முடியாமல் உள்ளுக்குள்ளேயே வைத்து மருகி, அவர்கள் படும் சிரமம்! அடடா! குழந்தை உள்ளம் படைத்த அழகிரிசாமியாலன்றி வேறு யாரால் இதை எழுதியிருக்க முடியும்?

ஆனால் அவர் எழுத்து குழந்தைத்தனமான எழுத்துமல்ல; முழுக்க முழுக்கக் குழந்தை உள்ளத்துடனேயே அவர் எல்லாக் கதைகளையும் எழுதிவிடவுமில்லை. வாழ்க்கையில் அடிபட்டு, பண்பட்டு, முதிர்ந்த உள்ளத்துடன் அவர் எழுதிய கதைகளையும் இந்தத் தொகுப்பில் காண்கிறோம்.

காதல் அரும்பு விடும் உள்ளத்தில் கோழைத்தனமும் புகுந்து கொள்ளுதல், இளம் மனைவி ஒருத்தியின் ஈடேறாத ஆசைகளுடன் கூடிய உள்ளம் அவளைப் படுத்தி வைக்கும் பாடு, அனாதைக் குழந்தையையும் தன் சொந்தக் குழந்தையாகப் பாவிக்கும் தாயுள்ளத்தின் பரிவு — இப்படியாக எல்லாக் கதைகளிலும் பல்வேறுபட்ட மனங்களைத் தான் அவர் வர்ணிக்கிறார்.

சிறுகதையின் இலக்கணம் என்று ஒன்று உண்டா, அப்படி இருந்தால் அழகிரிசாமி அதைக் கற்றுணர்ந்து எழுதத் தொடங்கினாரா என்றெல்லாம் நமக்குத் தெரியாது. சிறுகதை என்றால் அதற்கு ஓர் ஆரம்பம், ஒரு மையப் பகுதி, ஒரு முடிவு, ஒரு கருப்பொருள் போன்ற பலவும் வேண்டும் என்பார்கள். முடிவு, வாசகர்கள் எதிர்பாராத விதமாக அமைந்திருத்தல் நலம் என்பார்கள்.

அழகிரிசாமியின் கதைகளில் எதிர்பாராத திடீர் திருப்பம் ஏதும் இல்லை. சரி, அதுதான் போகட்டும் என்றால் சில கதைகள் ஆரம்பிக்கும் போதே முடிந்து விட்டதுபோல் தோன்றுகின்றன. வேறுசில முடிந்த பிறகு, 'இனிமேல் தான் கதையே ஆரம்பமாக வேண்டும்போலிருக்கே' என்று எண்ணத் தோன்றுகிறது.

ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். இவையெல்லாம் நெஞ்சைத் தொடும் கதைகள்; நினைவில் நிற்கும் கதைகள். வேறென்ன வேண்டும்?

— வி. ராஜேந்திரன்

---

''அன்பளிப்பு'' என்ற இந்நூலை ஏராளமான அச்சுப் பிழைகளுடன் வெளியிட்டுள்ளவர்கள்: தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை - 5; விலை ரூ. 4.

# க்தி தரிசனம்



என்னதான் முயன்றாலும், எவ்வுலகுக்கும் பொதுவான பேரருள் சக்தியை மனித மனம் இவ்வுலகத்தின் மண் மணம் கமழத்தான் சித்திரித்துக் காட்ட முடிகிறது. இவ்வுலகத்தின் அப்பாற்பட்ட நிலைக்கு அதன் கற்பனை விரிய முடிவதில்லை. விரிந்தாலும் விளங்கிக் கொள்ள முடிவதில்லை.

இவ்வுலக வாழ்வில் அன்னை தன் மக்களிடம் காட்டும் அன்பையும் பரிவையும், தன் மக்களுக்காகப் படும் துயர்களையும், புரியும் தியாகங்களையும் கண்டு தெளிந்த மக்கள், பரம்பொருளை அன்னை உருவில் கண்டு இன்பம் பெறுகிறார்கள். ஆதி பராசக்தியாக வழிபட்டு மகிழ்கிறார்கள். தன் உடலில் குடிகொண்டு தன்னை ஆட்டிப் படைக்கும் சக்தி தான் எங்கும் நிறைந்து நின்று இயக்குகிறது என்பதை உணர்ந்து, இறையின் நினைவு எந்நேரமும் நீங்காமல் இருக்க வேண்டும் என்ற நல்ல நோக்கில் கோயில் எடுத்துக் கும்பிடுகிறார்கள்.

இந்து சமூகம் இவ்விறை வழிபாட்டை வெறும் பாரமார்த்திகமாக மட்டும் கொள்ளாமல் அறவழி நின்று வாழும் வகையாகவும் மேற்கொண்டுள்ளது. உயிரைக் கோயிலாக்கி அதனுள் உறையும் சக்திக்குப் புற உலகில் கோயில் எழுப்பி மாபெரும் கோபுரம் கட்டிச் சக்தி மிகு சிலை சமைத்து வழிபடுவதில் தென்னாட்டுக்குத்தான் முதலிடம். காரணம் உலகத்தின் இதய ஸ்தானமாகத் தென்னாடு இருப்பதுதான். தென்னாட்டின் பூகோள உருவமே இதயமாகத் தோன்றவில்லையா, பார்ப்பதற்கு? கண்டதும் கையெடுத்துக் கும்பிடத் தோன்றும் வானளாவும் கோபுரங்கள்! கருத்தை நிறைக்கும் தெய்விகச் சிற்பங்கள்! தென்னாட்டில் இருப்பது போல் வேறு எங்குமே நாம் கண்டதில்லை.

ஊர் ஊராகச் சென்று இத்தனை வைபவங்களையும் காண எத்தனை பேர்களால் முடியும்? அப்படிக் கண்டாலும் அந்த அந்த இடத்து எழிலைத் தனித்துத்தானே காண முடியும்? எல்லாவற்றையும் ஏக காலத்தில் காணும் வாய்ப்பை ஜயராமன் பிக்சர்ஸார் எழில் மிகு வண்ணக் கலவையாக, இருபது நிமிட டாக்குமெண்டரியாகத் தருகிறார்கள். 'லியட் நாம் வீடு' புகழ் திரு சுந்தரம் இப்படத்தின் இயக்கும் பொறுப்பை ஏற்றிருக்கிறார். போட்டோ லித்தோ பிரஸ் ஸ்ரீ வி. சதாசிவம் இதைத் தயாரித்து அளிக்கிறார்.

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் சங்கராசார்ய சுவாமிகள், வீதியில் பவனி வரும் காமாட்சியம்மனைத் தரிசிக்கும் காட்சியில் தொடங்குகிறது படம். நடமாடும் தெய்வமாக விளங்கும் ஆசாரிய சுவாமிகளின் ஒளி தேக்கி நிற்கும் விழிகள், காமாட்சியின் அருட் சக்தியைப் பெற்று உலகத்துக்கு வழங்கும் காட்சி கண்களை நிறைக்கிறது. தரிசனத்துக்குப் பின் அவர் தம் கோயில் புகும் காட்சி ஆத்ம—பரமாத்ம இணைப்பை நினைவுபடுத்தி மெய் சிலிர்க்க வைக்கிறது!

—கோபுர தரிசனமே பாவ விமோசனம் என்பதை மதுரை மீனாட்சி அம்மன் கோயில் நினைவு படுத்துகிறது. திருவானைக்காவில்





சதாசிவம் — சுந்தரம்

குடிகொண்டிருக்கும் அன்னை அகிலாண்டேசுவரி, திருவொற்றியூரை அழகுபடுத்தும் வடிவுடைய நாயகி ஆகியவர்களைக் காணும் பொழுது இதயம் பூரிக்கும்.

தமிழர் வழிபடு தெய்வமான மாரியம்மன் கோயில்களனைத்தையும் ஒன்றன் பின் ஒன்றுகக் காணும்பொழுது கூப்பிய கை கூப்பிய படியே நிற்கிறது. தஞ்சாவூர், வண்டியூர், சமயபுரம், திருவேற்காடு என்று சக்தி உறையும் தெய்வங்களை உற்சவப் பகைப் புலனோடு கண்டு பூரிக்கிறோம். சென்னையின் முப்பாத்தம்மன், முண்டகக் கண்ணியம்மன், ஆலாத்தம்மன் ஆகியவர்களையும் தரிசிக்கும் பொழுது ஓரிடத்தில் உருவாகிப் பல இடங்களுக்கும் ஒளிகூட்டும் மின்சக்தியின் நினைவு தான் வருகிறது.

மேஜர் சுந்தரராஜன் கணீரென்று விளக்கவுரை வழங்குகிறார். குன்னக்குடி வைத்தியநாதன் இசையால் அவ்வவ்வூர்ச் சூழலையே கொண்டு வந்து நிறுத்துகிறார். மோகன் கிருஷ்ணனின் ஒளிப் படைப்பும் கண்களை நிறைக்கிறது. ஒலி—ஒளி வடிவமான அன்னை பராசக்தியே இப்பணிக்குத் துணை நிற்கிறாள், நானிலம் நலமுற வழிகாட்டுகிறாள் என்று பார்ப்போர் உள்ளத்தில் படுமளவுக்குச் 'சக்தி தரிசனம்' சிறப்பாகச் சித்திரமாகியுள்ளது.

—ரா. வீ.

# மோகினித் தீவு

## ஐந்தாம் அத்தியாயம்

அந்தப் பெண்ணரசி கதையில் இந்தக் கட்டத்துக்கு வந்தபோது ஆடவன் குறுக்கிட்டு, ''பெண்களின் விஷயமே இப்படித்தானே? வீண் பிடிவாதம் பிடித்து வேண்டாத காரியத்தைச் செய்து விடுவது, அப்புறம் அதற்காக வருத்தப் படுவது; — தாங்கள் வருந்துவது மட்டுமா? மற்றவர்களையும் பொல்லாத கஷ்டங்களுக்கு உள்ளாக்குவது; —இது பெண் குலத்தின் தனி உரிமை அல்லவா?'' என்றான்.

அவனுடைய காதலி ஏதோ மறுமொழி சொல்ல ஆரம்பித்தாள். அதற்கு இடங் கொடாமல் அந்த மோகன புருஷன் கதையைத் தொடர்ந்து கூறினான்:—

''காசியிலிருந்து வந்த தேவேந்திரச் சிற்பியின் தமையன் மகனைப் பார்த்ததும் மதிவாணனுக்கு அவனைப் பிடித்துப் போய் விட்டது. மதுரைமா நகரத்தில் பல்லாயிர மக்களுக்கு மத்தியில் இருந்தபோதிலும் மதிவாணனைத் தனிமை சூழ்ந்திருந்தது. காசியிலிருந்து வந்த கோவிந்தன் என்னும் வாலிபன் அந்தத் தனிமை நோய்க்கு மருந்தாவான் என்று தோன்றியது. கோவிந்தனிடம் அந்தரங்க அபிமானத்துடன் பேசினான்; நட்புரிமை பாராட்டினான். அடிக்கடி வர வேண்டும் என்று வற்புறுத்தினான். கோவிந்தன் சிற்பக் கலையைப் பற்றி நன்கு அறிந்திருந்தான். இலக்கியங்கள் — கவிதைகளிலும் பயிற்சி உடையவனாயிருந்தான். ஆகையால் அவனுடன் அளவளாவிப் பேசுவதற்கு மதிவாணனுக்கு மிகவும் விருப்பமாயிருந்தது. கோவிந்தன் 'எனக்கு இந்த நகரில் உறவினர் அதிகப்பேர் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் பார்க்க வேண்டும். ஆயினும் அடிக்கடி வரப் பார்க்கிறேன்!' என்றான்.

மதிவாணனுடைய விரதத்தைப் பற்றி அறிந்து கொண்ட கோவிந்தன் தனக்கும் ஒரு விரதம் உண்டு என்று சொன்னான். அதற்காக ஆசார நியமங்களைத் தான் கண்டிப்பாக நியமிப்பதாகவும், எவரையுமே தான் தொடுவதும் இல்லை, தன்னைத் தொடுவதற்கு விடுவதும் இல்லையென்றும் சொன்னான். இதைப் பற்றி மதிவாணன் எந்த விதமான சந்தேகமும் கொள்ளவில்லை. கோவிந்தனுடைய ஆசார நியமத்தைத் தான் எதற்காகக் கெடுக்க முயலவேண்டும் என்று இருந்து விட்டான்.

பாண்டிய குமாரி புருட வேடம் பூண்டு அடிக்கடி சிற்பக் கூடத்துக்கு வந்து போவது பற்றித் தேவேந்திரச் சிற்பியின் மனத்திலே கவலை உண்டாயிற்று. இதிலிருந்து ஏதேனும் விபரீதம் விளையப் போகிறதோ என்று பயப்பட்டார். பயத்தை வெளிப்படையாகச் சொல்லாமலும் இரகசியத்தை வெளியிடாமலும் தமது சீடனிடம், 'கோவிந்தன் வரத் தொடங்கியதிலிருந்து உன்னுடைய வேலையின் தரம் குறைந்து விட்டது' என்றார். அவன் அதை ஆட்சேபித்து, 'வேலை அபிவிருத்தி அடைந்திருக்கிறது' என்றான். பாண்டிய குமாரியோ தேவேந்திரச் சிற்பியின் ஆட்சேபங்களைப் பொருட்படுத்தவில்லை. இந்த நிலைமையில் தேவேந்திரச் சிற்பி தனியாய்த் தவித்துக் கொண்டிருந்தார். அதற்குத் தகுந்தாற்போல் அவருடைய கவலையை அதிகமாக்கும்படியான



அமரர் கல்கி

காரியம் ஒன்று நிகழ்ந்தது. மதுரை நகரின் ஒற்றர் தலைவன் ஒவ்வொரு நாளும் தேவேந்திரச் சிற்பியின் சிற்பக்கூடத்துக்கு வரத் தொடங்கினான். 'யாரோ புதிதாகச் சோழ நாட்டிலிருந்து ஒரு சீடன் வந்திருக்கிறானாமே? காசியிலிருந்து ஒருவன் வந்திருக்கிறானாமே?' என்றெல்லாம் விசாரணை செய்யத் தொடங்கினான். தேவேந்திரச் சிற்பியார் மனத்தில் பயந்து கொண்டு வெளிப்படையாகத் தைரியமாகப் பேசினார். 'இங்கே வந்து தொந்தரவு செய்தால் பாண்டியரிடம் சொல்லுவேன்' என்று ஒற்றர் தலைவனைப் பயமுறுத்தினார். அதற்கெல்லாம் ஒற்றர் தலைவன் பயப்படவில்லை. மறுபடியும் மறுபடியும் வந்து கொண்டிருந்தான்.

ஒரு நாள் கோவிந்தன் வேடம் பூண்டு வந்த ராஜகுமாரி மதிவாணனிடம் பேசிவிட்டு வெளி வந்த போது ஒற்றர் தலைவன் பார்த்து விட்டான். 'நீ யார், எங்கே வந்தாய்?' என்று கேட்டான். சந்தேகம் கொண்டு தலைப்பாகையை இழுத்துவிட்டான். உடனே புவனமோகினி ரௌத்ராகாரம் அடைந்து ஒற்றர் தலைவனைக் கண்டித்துத் திட்டினாள். அவன் நடுநடுங்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். பிறகு போய் விட்டான். இதெல்லாம் அரைகுறையாக உள்ளே தன் வேலைக் கூடத்தில் வேலை செய்து கொண்டிருந்த மதிவாணன் காதில் விழுந்தது. கோவிந்தனுடைய அதிகார தோரணையான பேச்சும் குரலும் அவனுக்கு வியப்பையும் ஓரளவு திகைப்பையும் உண்டாக்கின. கோவிந்தனைப் பற்றி ஏதோ ஒரு மர்மம் இருக்கிறதென்ற ஐயம் அவன் மனத்தில் உண்டாயிற்று.

இது நிகழ்ந்த சில நாளைக்கெல்லாம் பராக்கிரம பாண்டியரின் வெற்றியைக் கொண்டாடுவதற்காக ஒரு திருவிழா நடந்தது. அன்றைக்குப் பாண்டியரும் அவருடைய குமாரியும் ரதத்தில் அமர்ந்து ஊர்வலம் போனார்கள். அப்போது மதிவாணன் சிற்பக்கூடத்தின் மேல் மாடத்தில் நின்று ஊர்வலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சோழ ராஜகுமாரனுடைய மனம் அப்போது பெரிதும் கலக்கத்தை அடைந்திருந்தது. அவன் மதுரைக்கு வந்து பல மாதங்கள் ஆகிவிட்டன. ஆயினும் வந்த காரியம் நிறைவேறுவதற்கு வழி எதையும் அவன் காணவில்லை. உத்தம சோழரை வைத்திருந்த சிறைக்குக் கட்டுக்காவல் வெகு பலமாயிருந்ததை அவன் தெரிந்து கொண்டிருந்தான். எத்தனை எத்தனையோ யுக்திகளை அவன் உள்ளம் கற்பனை செய்தது. ஆனால் ஒன்றிலும் காரிய சித்தி அடையலாம் என்ற நிச்சயம் ஏற்படவில்லை. நாளாக ஆக, பராக்கிரம பாண்டியர்மீது அவனுடைய கோபம் அதிகமாகி வந்தது. வேறு வழி ஒன்றும் தோன்றாவிட்டால் பழிக்குப் பழியாகப் பராக்கிரம பாண்டியர்மீது வேல் எறிந்து அவரைக் கொன்றுவிட வேண்டும் என்று எண்ணினான்.

இத்தகைய மன நிலையில் அவன் சிற்பக்கூடத்தின் மேல் மாடத்திலிருந்து பாண்டிய மன்னரின் நகர்வலத்தை எதிர்நோக்கிக்கொண்டிருந்தான். பராக்கிரம பாண்டியர் வீற்றிருந்த அலங்கார வெள்ளி ரதம் நெருங்கி வந்துகொண்டிருந்தது. அந்த ரதத்தில் பாண்டியருக்குப் பக்கத்தில் ஒரு பெண் உட்கார்ந்திருப்பதை அவன் கவனித்தான். பாண்டியரின் பட்டமகிஷி காலமாகி விட்டாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆகையால் அரசர் பக்கத்தில் உட்கார்ந்து வருவது அவருடைய மகளாய்த்தான் இருக்க வேண்டும். தனக்கு நேர்ந்த இன்னல்களுக்கெல்லாம் காரணமான அந்தப் பெண் எப்படித்தான் இருப்பாள் என்று தெரிந்து கொள்ள அவனை மீறிய ஆவல் உண்டாயிற்று. ஆகையால் நின்ற இடத்திலிருந்து அகலாமல் நெருங்கி வந்த ரதத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

சிற்பக்கூடத்துக்கு நேராக ரதம் வந்ததும் பாண்டிய குமாரி சிற்பக்கூடத்தின் மேல் மாடத்தை நோக்கினாள். தேவேந்திரச் சிற்பியின் பல சீடர்களுக்கு மத்தியில் நின்ற மதிவாணனுடைய முகத்தை அவளுடைய கண்கள் தேடிப் பிடித்து அங்கேயே ஒருகண நேரம் நின்றன. அந்தக் கணத்தில் மதிவாணன் தன் மனத்தைச் சில காலமாகக் கலக்கி வந்த ரகசியத்தைக் கண்டு கொண்டான். எவ்வளவு திறமையாக எத்தனை வேடங்கள் வேணுமானாலும் போடலாம். ஆனால் கண்கள் உண்மையை வெளியிடாமல் தடுக்கமுடியாது. தேவேந்திரச் சிற்பியின் தமையன் மகன் என்று சொல்லிக் கொண்டு வந்து தன்னோடு சிநேகம் பூண்ட வாலிபன் உண்மையில் மாறுவேடம் தரித்த பாண்டிய குமாரி புவனமோகினிதான் என்று தெரிந்து விட்டது.

இந்த உண்மையைத் தெரிந்து கொண்டதும் குமாரனுடைய உள்ளம் கொந்தளித்தது. பற்பல மாறுபட்ட உணர்ச்சிகள் பொங்கி எழுந்தன. எல்லாவற்றிலும் முதன்மையாக இருந்தது தன்னை ஏமாற்றியவளைத் தான் ஏமாற்றிவிட வேண்டும் என்பதுதான்.

அப்படி ஏமாற்றுவதன் மூலம் தான் வந்த காரியத்தையும் நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். இதற்காக ஓர் உபாயத்தைச் சுகுமாரன் தேடிக் கடைசியில் கண்டுபிடித்தான். ஆனால் காரியத்தில் அதை நிறைவேற்றவேண்டி வந்த போது அவனுக்கு எவ்வளவோ வருத்தமாயிருந்தது....''

கதை இந்த இடத்துக்கு வந்தபோது அந்த ஆடவனின் முகத்தில் உண்மையான பச்சாதாபத்தின் சாயை படர்ந்தது. அவனுடைய குரல் தழுதழுத்தது. பேச்சு தானாகவே நின்றது. அவன் கதையை விட்ட இடத்தில் அந்தப் பெண்மணி எடுத்துக் கொண்டாள்:—

''பாவம்! அந்த வஞ்சகச் சிற்பியின் கபட எண்ணத்தை அறியாத புவனமோகினி வழக்கம் போல் மறுநாள் அவனைப் பார்ப்பதற்கு ஆண் வேடத்தில் சென்றாள். அவனைத் தான் ஏமாற்றிய தற்காகத் தன்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டாள்.

மதிவாணன் வெகு திறமையுடன் நடித்தான். நேற்றோடு தன் விரதத்தைக் கைவிட்டு விட்டதாகச் சொன்னான். பாண்டிய குமாரியின் சுண்டு விரல் ஆக்ஞைக்காகத் தன்னுடைய உயிரையே தியாகம் செய்யச் சித்தமாய் இருப்பதாகக் கூறினான். இனிமேல் ஆண் வேடம் பூண்டு வர வேண்டிய அவசிய மில்லை யென்றும் ராஜகுமாரியாகவே தன்னைப் பார்க்க வரலாம் என்றும் தெரிவித்தான். கள்ளங் கபடமற்ற புவனமோகினி அவனுடைய வஞ்சக வார்த்தைகளை யெல்லாம் உண்மையென்று நம்பினாள்.

இந்த நாளில் மேற்கே குடகு நாட்டுக்குப் படையெடுத்துச் சென்ற பாண்டிய சேனை பெருந் தோல்வி யடைந்து விட்டதாக ஒரு செய்தி வந்தது. பராக்கிரம பாண்டியர் 'தோல்வியை வெற்றியாகச் செய்து கொண்டு வருகிறேன்' என்று சொல்லி விட்டு உதவிப் படையுடன் புறப்பட்டுப் போனார். போகும் போது அவர் தம் அருமை மகளிடம் தம்முடைய முத்திரை மோதிரத்தை ஒப்படைத்து, 'நான் இல்லாத காலத்தில் இராஜ்யத்தைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு உன்னுடையது' என்று சொல்லி விட்டுப் போனார். ஆனால், தன்னுடைய உள்ளத்தையே பாதுகாக்க முடியாமல் நாடோடி வாலிபன் ஒருவனுக்குப் பறி கொடுத்து விட்ட புவனமோகினி இராஜ்யத்தை எப்படிப் பாதுகாப்பாள்? அவளுடைய மன நிலையை அறிந்த இளஞ் சிற்பி தன் வஞ்சக வலையைத் தந்திரமாக வீசினான்.

# ஒப்பந்தக் கூலி முறையை ஒழித்தவர்..!

பிப்ரவரி 11ம் தேதி தீனபந்து ஆன்ட்ரூஸின் நூறாவது பிறந்த தின விழா.

கரும்பு, தேயிலை, ரப்பர், தோட்டங்களில் வேலை செய்ய அயல் நாடுகளுக்குச் சென்ற இந்திய மக்கள் சொல்லொணாத் துயரங்களுக்கு ஆளான காலம் ஒன்றிருந்தது. இந்த ஒப்பந்தக் கூலிகளின் மிகப் பரிதாபமான நிலைமை ஆன்ட்ரூஸ் மனத்தை உருக்கிவிட்டது. இவர்களின் விமோசனத்துக்குத் தீவிரமாகத் தொண்டாற்ற வேண்டும் என்கிற எண்ணத்தை ஆன்ட்ரூஸ் மனத்தில் பதிய வைத்தவர் மகாத்மா காந்தி. தென்னாப்பிரிக்காவில் காந்திஜி ஆன்ட்ரூஸைத் தம் கூடவே கரும்புத் தோட்டங்களுக்கு அழைத்துச் சென்று ஒப்பந்தக் கூலிகள் அனுபவிக்கும் கொடுமைகளை நேரில் காட்டினார். இவர்கள் அடிமைகளையும்விடக் கேவலமாக நடத்தப்படுவதைக் கண்டு ஆன்ட்ரூஸ் கண்ணீர் வடித்தார்.

வைஸ்ராய் லார்ட் ஹார்டிஞ் ஆன்ட்ரூஸின் நண்பர். ஆன்ட்ரூஸ் கூறியதில் நியாயம் இருப்பதை வைஸ்ராய் உணர்ந்தார். ஆனால் உடனடியாக அவரால் எதுவும் செய்ய முடியவில்லை. காந்திஜியும் ஆன்ட்ரூஸும் எடுத்துக் கொண்ட முயற்சிகளின் பலனாக 1920 ஜனவரி முதல் தேதி ஒப்பந்தக் கூலி முறை ஒழிந்தது. இந்திய மக்களுக்கு ஆன்ட்ரூஸ் செய்த மாபெரும் பணி இது.

• • •

1904ல் இந்தியாவுக்கு ஒரு பேராசிரியராகச் சேவை செய்ய வந்த ஆன்ட்ரூஸ் இந்நாட்டையே தம் தாய் நாடாகக் கொண்டு சேவை செய்ய ஆரம்பித்தார். இந்திய சுதந்திரப் போராட்டத்தில் அவர் செய்த சேவை கணக்கிட்டுக் கூற முடியாது.

இந்தியாவுக்குப் பரிபூரண சுதந்திரம் அளிக்க வேண்டும் என்பதை 1920லேயே ஆன்ட்ரூஸ் வற்புறுத்தினார். சம்பரான் சத்தியாக்கிரகம் வெற்றி பெறவும் காந்தி இர்வின் உடன்பாடு ஏற்படவும் ஆன்ட்ரூஸ் உதவியாக இருந்தார். தொழிலாளர்களின் நண்பனாகவும் அவர் விளங்கித் தீனபந்து என்று அன்புடன் அழைக்கப்பட்டார்.

இவருடைய மனத்தை மிகவும் கவர்ந்தது தமிழ் நாடுதான். வடஆர்க்காடு மாவட்டத்தில் திருப்பத்தூர் கிறிஸ்துகுல ஆசிரமத்தை இவர் ஸ்தாபித்தார்.

இவர் 1940ல் கல்கத்தாவில் காலமானபோது, எதற்கும் கலங்காத காந்திஜி கண்ணீர் வடித்து அழுதார்.

ராஜாஜி அப்போது விடுத்த செய்தியில் ''அவரைவிட இந்தியாவின் அத்யந்த நண்பர் என்று யாரைச் சொல்ல முடியும்?'' என்று குறிப்பிட்டார். தீனபந்துவின் கிறிஸ்துகுல ஆசிரமம் அவருடைய சேவையின் சின்னமாக விளங்கித் தொண்டாற்றி வருகிறது.

- நஜன்



ஒரு நாள் புவனமோகினி தேவேந்திரச் சிற்பியின் சிற்ப மண்டபத்துக்குப் போனபோது மதிவாணன் சோகமே உருவமாக உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். அவனுக்கு எதிரே ஒரு செப்பு விக்கிரகம் உடைந்து சுக்கு நூறாகக் கிடந்தது. அவனுடைய சோகத்துக்குக் காரணம் என்னவென்று பாண்டிய குமாரி கேட்டாள். நொறுங்கிக் கிடந்த விக்கிரகத்தை இளஞ் சிற்பி காட்டி, 'செப்புச் சிலை வார்க்கும் வித்தை இன்னும் எனக்குக் கைவரவில்லை. என் ஆசிரியருக்கும் அது தெரியவில்லை. இந்த உயிர் வாழ்க்கையினால் என்ன பயன்? ஒரு நாள் வைகை யாற்றில் வெள்ளம் வரும்போது விழுந்து பிராணனை விட்டுவிடப் போகிறேன்' என்றான். பாண்டிய குமாரியின் இளகிய நெஞ்சு மேலும் உருகியது. 'அந்த வித்தையைக் கற்றுக் கொள்வதற்கு வழி ஒன்றும் இல்லையா?' என்று கேட்டாள். 'ஒரு வழி இருக்கிறது. ஆனால் அது கைகூடுவது துர்லபம்' என்றான் மதிவாணன். மேலும் குடைந்து கேட்டதில் அவன் தன் அந்தரங்கத்தை வெளியிட்டான். 'செப்புச் சிலை வார்க்கும் வித்தையை நன்கு அறிந்தவர் ஒரே ஒருவர் இருக்கிறார். அவர் இந்த நகரத்



தில் கட்டுக் காவலுடன் கூடிய கடுஞ் சிறையில் இருக்கிறார். உத்தம சோழரை ஒரு நாள் இரவு தனியாகச் சிறையில் பார்க்க முடியுமானால் போதும். அவரிடம் அந்த வித்தையின் இரகசியத்தை அறிந்து கொண்டு வந்து விடுவேன். உன்னிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேன். நான் இந்த நகரத்துக்கு வந்ததே அந்த நோக்கத்துடன்தான். ஏதாவது ஓர் உபாயம் செய்து உத்தம சோழரைச் சிறையில் சந்தித்து அவரிடமுள்ள இரகசியத்தை அறிந்து போகலாம் என்றுதான் வந்தேன். ஆனால் அது கைகூடுவதற்கு ஒரு வழியையும் காணவில்லை. நான் இந்த உலகில் உயிர் வாழ்ந்து என்ன பயன்?' என்றான். இதையெல்லாம் உண்மையென்று நம்பிய புவனமோகினி, 'நீ கவலைப்பட வேண்டாம். உன்னுடைய மனோரதம் ஈடேற நான் ஏற்பாடு செய்கிறேன்' என்றாள். அதை நம்பாததுபோல் மதிவாணன் நடித்தான். முடிவில் 'அவ்விதம் நீ உதவி செய்தால் என் உயிரையே கொடுத்தவளாவாய். நான் என்றென்றைக்கும் உன் அடிமையா யிருப்பேன்' என்றான்.

மறுநாள் புவனமோகினி மதிவாணனிடம் பாண்டிய மன்னரின் முத்திரை மோதிரத்தைக் கொடுத்தாள். 'இன்றிரவு இந்த மோதிரத்தை எடுத்துக் கொண்டு சிறைக் கூடத்துக்குப் போ! இதைக் காட்டினால் திறவாத சிறைக் கதவுகள் எல்லாம் திறந்து கொள்ளும். அசையாத காவலர்கள் எல்லாரும் வணங்கி ஒதுங்கி நிற்பார்கள். உத்தம சோழரைச் சந்தித்து இரகசியத்தைத் தெரிந்து கொள். நாளைக்கு முத்திரை மோதிரத்தை என்னிடம் பத்திரமாகத் திருப்பிக் கொடுத்து விடு!' என்றாள்.

மதிவாணன் முத்திரை மோதிரத்தை வாங்கிக் கொண்டு மறுபடியும் நன்றி கூறினான். பாண்டிய குமாரிக்குத் தான் ஏழேழு ஜன்மங்களிலும் கடமைப்பட்டிருப்பேன் என்று சொன்னான். அவளுக்குத் தன்னுடைய இருதயத்தையே காணிக்கையாகச் சமர்ப்பித்து விட்டதாகவும் இனி என்றென்றைக்கும் அவள் காலால் இட்ட பணியைத் தன் தலையினால் ஏற்றுச் செய்யப் போவதாகவும் கூறினான். அதையெல்லாம் அந்தப் பேதைப் பெண் — புவனமோகினி — உண்மை என்றே நம்பினாள்...'' (தொடரும்)



அனுமான் கோயில் சுவர்களின் மேலெல்லாம் அங்கத சந்ததிகள். அயோத்தி நகரில் மிக அதிகமாக வணங்கப்படுவது அனுமான் தான். அயோத்தியில் மட்டுமல்ல, வட இந்தியா முழுவதுமே அந்த நிலைமைதான்.

தொடர்ந்து நடந்தால் சாலையின் வலது புறத்தில் யக்ஞ குண்டங்கள். இங்கேதான் தசரதன் புத்திரகாமேஷ்டி யாகம் செய்ததாக ஐதிகம். எதிர்த்தாற்போல 'படாஸ்தான்' என்ற பெயரில் ஓர் ஆலயம் விளங்குகிறது. இந்த இடத்தில் முன்பு தசரத மன்னனின் அரண்மனை இருந்ததாம். தென்கலை நாமம் தரித்த பல சாதுக்கள் அமைதியுடன் அமர்ந்து துளசி ராமாயணம் படிக்கிறார்கள். வீதியெல்லாம் கோயில்கள். பரத் மந்திர், சுந்தர் சதன், ரங்மஹல், சீதா ரஸோயி என்று பற்பல ஆலயங்கள். ஆனால் எழிலே உருவமாகத் தமிழ் நாட்டில் தெய்வ பிம்பங்களைப் பார்த்துப் பழகிய நமக்கு இங்குள்ள தெய்வங்கள் பயமுறுத்துவது போல் படைக்கப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

இதிலே ஜன்மபூமி எனப்படும் புனிதத் தலம் இன்று பெரிய கேள்விக் குறியாக மாறிவிட்டது. இந்த இடம்தான் ராமனின் பிறப்பிடம் என்று பெரும்பாலோர் நம்புகிறார்கள். இந்த மண்ணில் நியமத்துடன்

வழக்கு நீதிமன்றத்தில் உள்ளது. அடுத்து என்ன ஆகும் என்று அலகிலா விளையாட்டுடைய ஆண்டவனுக்குத்தான் தெரியும்.

அயோத்தியை வடநாட்டில் அவத் என்று சொல்லுவார்கள். அந்தப் பிரதேசத்தில் வழங்கிய மொழி 'அவதி'. இராமனின் சரித்திரத்தை வட இந்தியாவில் பரப்பியவர் துளசிதாஸ் கோஸ்வாமி. அயோத்தியில் அவரை நினைவுறுத்த ஒரு நெடுஞ்சாலை உள்ளது. அவருடைய பளிங்குச் சிலையைச் சுற்றிப் பெரிய நந்தவனமும் அமைத்திருக்கிறார்கள். அங்கேயே மற்ற மொழிகளில் இராமாயணம் வரைந்த வால்மீகி, கம்பன், காளிதாசன், பாசன், பவபூதி, ராமானுஜாசார்யார், கிருத்திவாசர், பம்பர், மொல்லம்மா, பாஸ்கரர், ரங்கநாதர், ஏகநாதர் ஆகியோருக்கும் சிலைகள் எழுப்புவது மிகவும் பொருத்தமான, பெருந்தன்மையான செயலாக இருக்குமல்லவா?

அயோத்தியைக் குறித்துச் சீன யாத்திரிகனான ஹுவான் த்சாங் குறிப்பிடுகிறான். இருபது புத்த ஆலயங்களும், மூவாயிரம் பிட்சுக்கள் தங்கக்கூடிய விஹாரங்களும் அங்கு இருந்ததாக அவன் எழுதுகிறான்.

அதற்குப் பிறகு இந்தச் சரயு நதி எவ்வளவோ ஏற்ற இறக்கங்களைக் கண்டுள்






புரியப்பட்ட வழிபாடுகள் சிறந்த பலனை அளிப்பதைப் பல சித்த புருஷர்கள் உறுதிப்படுத்தியிருக்கிறார்கள். ஆதிநாளில் இங்கு கோயில் ஒன்று இருந்திருக்கிறது. பாபரது காலத்தில் இதைத் தகர்த்துவிட்டு மசூதி எழுப்பப்பட்டது. அதற்குப் பிறகு நிறைய உதிரச் சேதம். பல உயிர்கள் பலியாயின. இந்தக் கட்டடம் இன்று கீழ்ப் பகுதி கோயிலாகவும் மேல்புறம் மசூதியாகவும் விளங்குவதை அனைவரும் காணலாம்.

இன்றைய நிலை என்ன? இந்த ஆலய மசூதிக்கு இரும்புக் கதவு போட்டிருக்கிறது. உள்ளே இராம பிரானின் ஓவியம். இரும்புக் கதவின் பின்னாலிருந்து பூசாரி தீர்த்தம் தருகிறார். வெளிப் பிராகாரத்தில் ராமலக்கன் தாஸ் என்ற சாதுவும் அவரது தோழர்களும் சென்ற இருபத்தோரு ஆண்டுகளாக இரவும் பகலுமாக அகண்ட பஜனை செய்கிறார்கள்.



(மேலே)
சரயு பாலம்
□
(கீழே)
ஜன்ம பூமி



ளது. அதன் மணலில் எத்தனை பேருடைய அடிச்சுவடுகள்!

ஃபைஜாபாத்தில் இந்தியத் தரைப்படையின் போலீஸ் பயிற்சி நிலையமும் மோட்டார் பொறியியல் பயிற்சி நிலையமும் செயல்படுகின்றன. படையினர் அங்கே ஓர் ஆலயம் அமைத்திருக்கிறார்கள். ஜவான்கள் தங்கள் எளிய சேமிப்பையும் உடலுழைப்பையும் தந்தனர். பிர்லா 25,000 ரூபாய் நன்கொடை அளித்தார்.

இந்திய ஒருமைப்பாட்டைப் பிரதிபலிக்கச் செய்கிறார்கள் இந்தக் கோவிலில். உள் விதானம் அமிர்தசரஸ் ஹரி மந்திரைப்போல் உள்ளது. சிவனும் உமையும் கணபதி முருகனுடன் காட்சி அளிக்கிறார்கள். (வடநாட்டில் முருகனை யாரும் அறியார்) சித்தார்த்தருக்கும் ஜைனருக்கும் தனித் தனி சந்நிதிகள். கோயிலைச் சுற்றி நந்தவனம். முகப்பில் ராஜஸ்தானத்துக் கலையைப் பிரதிபலிக்கும் தலைவாயில்.

இந்தப் பகுதியின் சிறப்பு மிக்க விளைபொருள் மாம்பழமும் கொய்யாவும். பிரசித்தி பெற்ற லக்னௌ தஸ்ஸேரி இங்கிருந்துதான் ஏற்றுமதியாகிறது. அது தற்போது ஒரு டாலர் பழம். கொய்யாப் பழம்—தேங்காய் பருமன் — கிலோ முப்பது காசு! ''சரயு என்பது தாய்முலை அன்னது...இங்கும் உயிர்க்கு எல்லாம்'' என்று இந்த நதியின் வளத்தை வியந்து கூறுகிறார் கம்பர். இந்த நதியை யொட்டியுள்ள இன்னும் பல வளமுள்ள நிலப் பகுதிகள் உபயோகத்துக்குக் கொண்டுவரப்படவில்லை என்பதும் உண்மை.

அயோத்தி நகரை உணர்ச்சி பூர்வமாக அணுகினால்தான் சில கணங்களுக்காவது ஏதாவது புலப்படும். இல்லையானால் அங்கு மிச்சப்படுவது குரங்குகளும், கொல்லுகிற வெய்யிலும்தான்.







1. (இடது) துளசி மண்டபம்.
2. (மேலே) படாஸ்தான்.
3. (கீழே) படையினரின் பெரிய ஆலயம் - மிலிட்டரி மந்திர்.

**அயோத்தி நகரில் ஜன்ம பூமி எனப்படும் புனிதத் தலம் இன்று மிகப் பெரிய கேள்விக்குறியாக மாறி விட்டது!**



# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

### அத்தியாயம் பன்னிரண்டு

## தூமகேது மறைந்தது!

நெடு நேரத்துக்கு அப்பால் பழுவேட்டரையருக்குச் சிறிது நினைவு வந்த போது, அவர் ஒரு பயங்கரமான போர்க்களத்தில் இருப்பதைக் கண்டார். வாள்கள் ஒன்றோடொன்று மோதி ஜண ஜண வென்று ஓங்கார ஒலி எழுப்பின. ஒரு பக்கத்தில் ஜய பேரிகைகள் முழங்கிக் கொண்டிருந்தன. அவற்றுடன் சேர்ந்து ஆயிரக் கணக்கான குரல்கள், ''மகா ராஜாதி ராஜ பாண்டிய மன்னர் வாழ்க! பாண்டிய விரோதிகள் வீழ்க!'' என்று கோஷமிட்டன. இன்னொரு பக்கத்தில் ஆயிரக்கணக்கான குரல்கள் ''கங்க மன்னன் விழுந்து விட்டான்! ஓடுங்கள்! ஓடுங்கள் !'' என்று கூக்குரலிட்டன. ஓடுகிறவர்களைத் தடுத்து நிறுத்தும் குரல்கள் சிலவும் கேட்டன.

அப்போது திடீரென்று ஒரு கணம் போர்க்களத்தில் நிசப்தம் நிலவியது. பழுவேட்டரையர் சுற்றுமுற்றும் பார்த்தார். இரண்டு கால்களையும் இழந்த விஜயாலய சோழனை இன்னொரு நெடி துயர்ந்த ஆஜானுபாகுவான மனிதன் தன் தோள்களிலே தூக்கிக் கொண்டு



வந்தான். தோள் மீது அமர்ந்திருந்தவன் இரண்டு கரங்களிலும் இரண்டு ராட்சத வாள்களை ஏந்திக் கொண்டிருந்தான். ''சோழ வீரர்களே! நில்லுங்கள்! பல்லவர்களே! ஓடாதீர்கள்! ஆறிலும் சாவு! நூறிலும் சாவு! என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள்! எதிரிகளைச் சின்னபின்னம் செய்வோம்!'' என்று அவன் கோஷித்தான். ஓடத் தொடங்கியிருந்த சோழ — பல்லவ வீரர்கள் விஜயாலய சோழனைப் பார்த்துவிட்டு, அவன் வார்த்தைகளைக் கேட்டு விட்டு நின்றார்கள். அவர்களுடைய

முகங்களிலே சோர்வும் பீதியும் நீங்கி மீண்டும் திரமும் வீரக் களையும் தோன்றின. பின்வாங்கியவர்கள் முன்னேறத் தொடங்கினார்கள். இந்த அதிசய மாறுதலுக்குக் காரணமாயிருந்த விஜயாலய சோழனை மீண்டும் பழுவேட்டரையர் பார்த்தார். அவனைத் தோளிலே தாங்கிக் கொண்டு நின்ற வீரனையும் பார்த்தார். அதிசயம்! அதிசயம்! அப்படித் தாங்கிக் கொண்டிருந்த வீரன் தாமே தான் என்பதைக் கண்டார். அந்தப் பழுவேட்டரையர் ஒரு கையால் தம் தோளின் மீதிருந்த இரு காலும் இல்லாத விஜயாலய சோழனைப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையில் பிடித்திருந்த நீண்ட கத்தியைச் சுழற்றிக் கொண்டே எதிரிகளிடையே புகுந்தார். அவர்கள் இருவரும் போன இடமெல்லாம் பாண்டிய வீரர்களின் தலைகள் தரையில் உருண்டு விழுந்தன.

போர் நிலைமை அடியோடு மாறிவிட்டது. பாண்டிய சைனியம் சிதறி ஓடியது. சோழ பல்லவர்கள் வென்றார்கள். எட்டுத் திக்கும் அதிரும்படி ஜயபேரிகைகள் முழங்கின. பல்லவ சக்கரவர்த்திக்கு முன்னால் விஜயாலய சோழர் அமர்ந்திருந்தார். அவருக்கு அருகில் பழுவேட்டரையர் நின்றார். பல்லவ சக்கரவர்த்தி சோழ மன்னரைப் பார்த்து, "வீராதி வீரரே! உம்மாலே இன்று தோல்வி வெற்றியாயிற்று! இனிச் சோழ நாடு சுதந்திர நாடு! நீரும் உமது வீரப் புதல்வன் ஆதித்தனும் உங்கள் சந்ததிகளும் என்றென்றும் சுதந்திர மன்னர்களாகச் சோழ நாட்டை ஆளுவீர்கள்!" என்றார். உடனே விஜயாலய சோழர் தமக்கருகில் நின்ற பழுவேட்டரையரைப் பார்த்து, "அத்தான்! தங்களாலேதான் இந்த வெற்றி நமக்குக் கிட்டியது. சுதந்திர சோழ நாட்டின் சேனாதிபதியாகவும் தனாதிகாரியாகவும் உம்மை நியமிக்கிறேன். உமது சந்ததிகளும் சோழ குலத்துக்கு உண்மையாயிருக்கும்வரையில் தனாதிகாரிகளாகவும் சேனாதிபதிகளாகவும் இருப்பார்கள்!" என்றார். பழுவேட்டரையரின் காயங்கள் நிறைந்த முகம் பெருமிதத்தால் மலர்ந்தது.

திடீரென்று அந்த முகத்தில் கடுங்கோபம் தோன்றியது. அந்தப் பழைய பழுவேட்டரையர் இந்தப் புதிய பழுவேட்டரையரைப் பார்த்தார். "அடபாவி! துரோகி! சண்டாளா! என் குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பே! ஆறு தலைமுறையாகச் சேர்த்த அருமையான வீரப் புகழை யெல்லாம் நாசமாக்கிக் கொண்டாயே? சிநேகிதத் துரோகமும் எஜமானத் துரோகமும் செய்தாயே? சோழ குலத்தின் பரம்பரைப் பகைவர்களுக்கு உன்னுடைய வீட்டிலே இடங் கொடுத்தாயே? உன்னுடைய பொக்கிஷத்திலிருந்து பொருள் கொடுத்தாயே? உன்னால் அல்லவோ இன்று சோழ குலத்துக்கு இறுதி நேரப் போகிறது! நீ நாசமாய்ப் போவாய்! உனக்கும் உன் குலத்துக்கும் உன்னால் உற்ற பழி உலகம் உள்ளளவும் மாறவே மாறாது!" என்று சபித்தார். சபித்த பழுவேட்டரையரின் கண்களில் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது.

பிறகு மற்றும் பல பழுவேட்டரையர்கள் வந்தார்கள். ஒவ்வொருவரும் தாம் தாம் செய்த வீரச் செயல்களைக் கூறினார்கள். ஒவ்வொருவரும் பழுவேட்டரையரைச் சபித்தார்கள். பின்னர் எல்லாரும் சேர்ந்து சபித்தார்கள். "சண்டாளா! குலத் துரோகமும் இராஜத்துரோகமும் செய்துவிட்டாயே? நாங்கள் உயிரைக் கொடுத்துச் சம்பாதித்த வீரப் புகழை யெல்லாம் நாசமாக்கி விட்டாயே! உன் புத்தி ஏன் இப்படிப் போயிற்று?" என்றார்கள்.

பழுவேட்டரையர்கள் மறைந்தார்கள். கொடும்பாளூர் வேளிர்களும் திருக்கோவலூர் மலையமான்களும் வந்தார்கள். தன்னந் தனியே நின்ற பழுவேட்டரையரைச் சூழ்ந்து கொண்டார்கள். "சீச்சீ! நீயும் ஒரு மனிதனா? சோழர் குலத்தை நீயும் உன் பரம்பரையுந்தான் தாங்கி வந்தது என்று பெருமை அடித்துக் கொண்டாயே? இப்போது என்ன சொல்லுகிறாய்? சோழ குலத்துக்கு நீ யமனாக மாறிவிட்டாயே? பாதகா! உன் பவிஷு எங்கே?" என்று கூறி எக்காளம் கொட்டிச் சிரித்தார்கள்.

அவர்களுக்குப் பின்னால் கூட்டமாக நின்ற சோழநாட்டு மக்கள் கல்லையும் மண்ணையும் வாரிப் பழுவேட்டரையர் மீது எறியத் தொடங்கினார்கள். அச்சமயம் சுந்தர சோழ சக்கரவர்த்தி அந்தக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு பலமற்ற கால்களினால் தள்ளாடி நடந்து வந்தார். வேளிர்களையும் மலையமான்களையும் மற்றவர்களையும் கோபமாகப் பார்த்தார். "சீச்சீ! என்ன காரியம் செய்கிறீர்கள்? வீராதி வீரரான பழுவேட்டரையர் மீதா கல்லையும் மண்ணையும் எறிகிறீர்கள்? அவரையா துரோகி என்கிறீர்கள்? பழுவேட்டரையரின் துரோகத்தினால் நானும் என் குலமும் அழிந்து போனாலும் போகிறோம். நீங்கள் யாரும் அவரைக் குற்றம் சொல்ல வேண்டாம்! தனாதிகாரி! வாரும் என்னுடைய அரண்மனைக்கு"

என்றார். ஜனக் கூட்டம் கலைந்து போயிற்று. சுந்தர சோழரும் மறைந்தார். தம்பி காலாந்தக கண்டர் மட்டும் பழுவேட்டரையர் முன்னால் நின்றார். "அண்ணா! நம்மிடம் இவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாரே சக்கரவர்த்தி! அவருக்குத் துரோகம் செய்யலாமா? அவருடைய குலத்தை அழிக்க வந்த பெண் பேயை நம் அரண்மனையில் வைத்துக் கொண்டிருக்கலாமா?" என்றார். உடனே அவரும் மறைந்தார்.

வந்தியத்தேவனும் கந்தமாறனும் அவர்களையொத்த வாலிபர்களும் பெரிய பழுவேட்டரையரைச் சூழ்ந்து கொண்டார்கள். "மீசை நரைத்த கிழவா! உனக்கு ஆசை மட்டும் நரைக்கவில்லையே? பெண் மோகத்தினால் அழிந்து போனாயே? உன் உடம்பிலுள்ள அறுபத்து நாலு புண்களும் இப்போது என்ன சொல்லுகின்றன? அவை வீரத்தின் பரிசான விழுப் புண்களா? அல்லது துரோகத்தின் கூலியான புழுப் புண்களா?" என்று கேட்டு விட்டுக் கலகல வென்று சிரித்தார்கள். அவர்களைக் கொல்லுவதற்காகப் பழுவேட்டரையர் தம் உடை வாளை எடுக்க முயன்றார். ஆனால் உடைவாள் இருக்க வேண்டிய இடத்தில் அதைக் காணவில்லை.

இச்சமயத்தில் குந்தவைப் பிராட்டி வந்தாள். வாலிபர்களை நோக்கிக் கையமர்த்திச் சிரிப்பை நிறுத்தினாள்.

"பாட்டா! இவர்களுடைய விளையாட்டுப் பேச்சைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டாம். தங்கள் அரண்மனையில் உள்ள பெண் வேடங்கொண்ட விஷப் பாம்பைத் துரத்தி விடுங்கள்! எல்லாம் சரியாகி விடும்!" என்றாள்.

அவர்கள் மறைந்தார்கள். பழுவேட்டரையர் குலத்தைச் சேர்ந்த பெண்கள் வரத் தொடங்கினார்கள். பத்துப் பேர், நூறு பேர், ஆயிரம் பேர், ஆறு தலைமுறையைச் சேர்ந்தவர்கள் வந்து, அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். "ஐயையோ! உனக்கு இந்தக் கதியா நேரவேண்டும்! நம்முடைய வீரக் குலத்துக்கு உன்னால் இந்தப் பெரும் பழியா ஏற்பட வேண்டும்! நாங்கள் எங்கள் கணவன்மார்களையும் அண்ணன்மார்களையும் தம்பிமார்களையும் பத்து மாதம் சுமந்து பெற்ற பிள்ளைகளையும் சோழ நாட்டுக்காகப் போர்க்களத்துக்கு அனுப்பி வைத்தோமே? அவர்கள் இரத்தம் சிந்தி உயிரைக் கொடுத்துப் பழுவூர் வம்சத்துக்கு இணையில்லாப் புகழைத் தேடித் தந்தார்களே? அதையெல்லாம் ஒரு நொடியில் போக்கடித்துக் கொண்டாயே?" என்று கதறினார்கள்.

"பெண்களே! வாயை மூடிக் கொண்டு அந்தப்புரத்துக்குப் போங்கள். என்னால் ஒரு பழியும் உண்டாகாது!" என்று பழுவேட்டரையர் கஷ்டப்பட்டுப் பதில் கூறினார். அப்பொழுது அந்தப் பெண்கள் ஒரு திசையில் சுட்டிக் காட்டினார்கள். எமதர்ம ராஜன் எருமைக் கடா வாகனத்தில் ஏறிக் கொண்டு, கையில் வேலும், பாசக் கயிறும் எடுத்துக்கொண்டு வந்தான். பழுவேட்டரையரை நெருங்கினான். போகிற போக்கில் "பழுவேட்டரையா! உனக்கு மிக்க வந்தனம்! சுந்தர சோழனுடைய உயிரையும் அவனுடைய மக்கள் இருவர் உயிரையும் ஒரே நாளில் கொண்டுபோக உதவி செய்தாய் அல்லவா? உனக்கு என் நன்றி!" என்று கூறினான் யமதர்ம ராஜன்.

"இல்லை, இல்லை! நான் உனக்கு உதவி செய்யவில்லை; செய்யமாட்டேன். உன்னைத் தடுப்பேன்! யமனே! நில்! நில்! நில்!" என்று பழுவேட்டரையர் அலறினார். யமனைத் தடுத்து நிறுத்துவதற்காக விரைந்து செல்ல முயன்றார். ஆனால் அவரை ஏதோ ஒரு சக்தி பிடித்து நிறுத்தியது. ஏதோ ஒரு பெரிய பாரம் அவரை அமுக்கியது. நின்ற இடத்திலிருந்து அவரால் நகர முடியவில்லை.

"பார்த்தாயா! நாங்கள் சொன்னது சரியாய்ப் போய்விட்டதே!" என்று கூறிவிட்டுப் பழுவேட்டரையர் குலப் பெண்கள் 'ஓ' வென்று சத்தமிட்டுப் புலம்பினார்கள். அவர்களில் பலர் ஒப்பாரி வைத்து அழுதார்கள்.

அவர்களுடைய அழுகுரலின் சப்தம் நிமிடத்துக்கு நிமிடம் அதிகமாகி வந்தது. பழுவேட்டரையரால் அதைச் சகிக்க முடியவில்லை. அவர் பேச முயன்றார். ஆனால் அழுகைச் சத்தத்தில் அவர் பேச்சு மறைந்து விட்டது.

அழுகையையும் புலம்பலையும் கேட்கச் சகிக்கவில்லை. இரண்டு கைகளினாலும் செவிகளைப் பொத்திக் கொள்ள முயன்றார். ஆனால் அவருடைய கைகளும் அசைவற்றுக் கிடந்தன. அவற்றை எடுக்கவே முடியவில்லை.

ஒரு பெரு முயற்சி செய்து கரங்களை உதறி எடுத்தார். அந்த முயற்சியிலே அவருடைய கண்ணிமைகளும் திறந்து கொண்டன. சட்டென்று நினைவு வந்தது. அத்தனை நேரமும் அவர் அநுபவித்தவை மனப் பிரமையில் கண்ட காட்சிகள் என்பதை உணர்ந்தார். ஆனால் ஓலக் குரல் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. சற்றுக் கவனித்துக் கேட்டார். அவை பெண்களின் ஓலக் குரல் அல்ல; நரிகளின் ஊளைக் குரல்!

அவர் நினைவு இழந்து கொண்டிருந்த சமயத்தில் இலேசாகக் காதில் விழுந்த சம்பாஷணை ஞாபகத்துக்கு வந்தது.

''கிழவன் செத்துப் போய் விட்டான்!'' என்றது ஒரு குரல்.

''நன்ருகப் பார்! பழுவேட்டரையருடைய உயிர் ரொம்பக் கெட்டி. யமன் கூட அவன் அருகில் வரப் பயப்படுவான்!'' என்றது மற்ருெரு குரல்.

''யமன் பயப்பட்டாலும் நரி பயப்படாது. கொஞ்ச நஞ்சம் உயிர் மிச்சமிருந்தாலும் நரிகள் சரிப்படுத்தி விடும். பொழுது விடியும்போது கிழவனின் எலும்புகள்தான் மிச்சமிருக்கும்!''

''நல்ல சமயத்தில் நீ பிளந்த மண்டபத்தைத் தள்ளினுய். இல்லாவிடில் நான் அந்தக் கதியை அடைந்திருப்பேன். கிழவன் என்னைக் கொன்றிருப்பான்!''

''எங்கே? மண்டபத்தை நகர்த்த முடியுமா, பார்க்கலாம்!''

சற்றுப் பொறுத்து, ''துளிக்கூட அசையவில்லை! ஒரு பகைவனுடைய பள்ளிப் படையைக் கொண்டு இன்னெருவனுக்கும் வீரக்கல் நாட்டிவிட்டோம்'' என்று கூறிவிட்டு மந்திரவாதி கலகலவென்று சிரித்தான்.

''சிரித்தது போதும், வா! படகு பிய்த்துக் கொண்டு ஆற்ருேடு போய் விடப் போகிறது. அப்புறம் கொள்ளிடத்தைத் தாண்ட முடியாது!''

*　*　*

இந்த வார்த்தைகளை ஞாபகப்படுத்திக்கொண்டு பழுவேட்டரையர் தம்முடைய நிலை இன்னதென்பதை உணர்ந்தார். ஆம்; அவர்மீது பள்ளிப்படை மண்டபத்தின் ஒரு பாதி விழுந்து கிடந்தது. அதன் பெரிய பாரம் அவரை அமுக்கிக் கொண்டிருந்தது. ஆனுல் மூச்சுவிட முடிகிறது. எப்படி?

நல்ல வேளையாக மண்டபத்தோடு விழுந்த மரம் அவர் தோளின் மீது படிந்து அதன்பேரில் மண்டபம் விழுந்திருந்தது. மண்டபத்தை யொட்டியிருந்த மரம்தான் அவர் உயிரைக் காப்பாற்றியது; மண்டபம் நேரே அவர் மேல் விழுந்திருந்தால் மார்பும் தலையும் நொறுங்கிப் போயிருக்கும்.

கிழவனுர் தம்முடைய உடம்பின் வலிமையை எண்ணித் தாமே ஆச்சரியப்பட்டார். அந்தப் பெரிய பாரத்தை இத்தனை நேரம் சுமந்தும் தம்முடைய உயிர் போகவில்லை என்பதை உணர்ந்து கொண்டார். ஆனுல் இவ்வளவு கெட்டியான உயிரை இன்னமும் காப்பாற்றிக் கொள்ள முடியுமா?

ஆம்; எப்படியாவது காப்பாற்றிக் கொண்டேயாகவேண்டும். காப்பாற்றிக் கொண்டு சோழ குலத்துக்கு நேரவிருந்த அபாயத்தைத் தடுக்க வேண்டும். அப்படித் தடுக்காவிட்டால் அவருடைய குலத்துக்கு என்றும் அழியாத பழி இவ்வுலகில் ஏற்படுவது நிச்சயம். வானுலகத்துக்குப் போனுல் அங்கேயும் அவருடைய மூதாதையர்கள் அனைவரும் அவரைச் சபிப்பார்கள். ஆகையால் எந்தப் பாடுபட்டாவது இந்த மரத்தையும் மண்டபத்தையும் அப்புறப்படுத்தி எழுந்திருக்க வேண்டும். ஐயோ! எத்தனை நேரம் இங்கே இப்படி நினைவு இழந்து கிடந்தோமோ என்னமோ தெரியவில்லையே! இதற்குள் ஒரு வேளை நாம் தடுக்க விரும்பும் விபரீதங்கள் நேரிட்டிருக்குமோ?

இதற்கிடையில் நரிகளின் ஊளைக் குரல் நெருங்கி நெருங்கி வந்துகொண்டிருந்தது. நரிகள் மூச்சுவிடும் சத்தம் அவர் தலைக்கு அருகில் கேட்டது! ஆகா! இந்த நரிகளுக்குக்கூடவா பழுவேட்டரையனைக் கண்டு இளக்காரமாகப் போய்விட்டது? பார்க்கலாம் ஒரு கை!

பழுவேட்டரையர் ஒரு கையினுல் மட்டும் அல்ல, இரண்டு கைகளினுலும் பார்க்கத் தொடங்கினுர். தம் உடம்பில் மிச்சமிருந்த பலம் முழுவதையும் பிரயோகித்து அவர் மீது விழுந்து கிடந்த மரத்தைத் தூக்க முயன்ருர். மரம் சிறிது சிறிதாக உயர உயர அதன் மேல் நின்ற மண்டப் பாறை நகர்ந்து சரியத் தொடங்கியது. இடையிடையே அவர் செய்த ஹுங்காரங்கள் நெருங்கி வந்த நரிகளை அப்பால் நகரும்படி செய்தன.

ஒரு யுகம் எனத் தோன்றிய ஒரு நாழிகை முயன்ற பிறகு அவரை அமுக்கிக்கொண்டிருந்த மரமும் மண்டபப் பாறையும் சிறிது அப்பால் நகர்ந்து அவரை விடுதலை செய்தன.

அந்த முயற்சியினுல் அவருக்கு ஏற்பட்ட சிரமம் காரணமாகச் சிறிது நேரம் அப்படியே கிடந்தார். பெரிய நெடுமூச்சுக்கள் விட்டார்.

ஆகாசத்தை அண்ணுந்து பார்த்தார். மண்டபம் சரிந்து விட்டதாலும் புயலில் மரங்கள் பல விழுந்து விட்டிருந்தபடியாலும் வான வெளி நன்ருகத் தெரிந்தது. இப்போது கரு மேகங்கள் வானத்தை மறைத்திருக்கவில்லை. வைரப் பொறிகள் போன்ற எண்ணற்ற நட்சத்திரங்கள் தெரிந்தன. இலேசான மேகங்கள் அவற்றைச் சிறிது மறைத்தும் பின்னர் திறந்துவிட்டும் அதி வேகமாகக் கலைந்து போய்க் கொண்டிருந்தன.

சட்டென்று வானத்தில் வட திசையில் தோன்றிய ஒரு விசித்திரமான நட்சத்திரம் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அடடா! சில நாளைக்கு முன்பு அவ்வளவு நீளமான வாலைப்

பெற்றிருந்த தூமகேதுவா இப்போது இவ்வளவு குறுகிப் போயிருக்கிறது? அந்த நட்சத்திரத்தின் ஒரு முனையில் சுமார் ஓர் அடி நீளம் வெளிறிய புகைத் திரள்போல் நீண்டிருந்தது. பத்து நாட்களுக்கு முன்புகூட வானத்தின் ஒரு கோணம் முழுவதும் நீண்டிருந்த வால் இப்படிக் குறுகிவிட்ட காரணம் என்ன?

வானத்திலிருந்து பார்வையை அகற்றிச் சுற்று முற்றும் பார்த்தார். நரிகள் இன்னும் போகவில்லை என்பதைக் கண்டார்! பத்து, இருபது — ஐம்பது நரிகள் இருக்கும். அவற்றின் கண்கள் நெருப்புத் தணல்களைப் போல் காட்டின் இருளில் ஜொலித்துக் கொண்டிருந்தன. கிழவன் எப்போது சாகப் போகிறான் என்று காத்துக் கொண்டிருந்தன போலும்! போகட்டும்! அவ்வளவு மரியாதையாவது பழுவேட்டரையனிடம் இந்த நரிகள் காட்டுகின்றனவே!...

திடீரென்று வானமும் பூமியும் அந்த வனப் பிரதேசம் முழுவதும் ஒளி மயமாயிற்று. பழுவேட்டரையரின் கண்கள் கூசின. அது மின்னல் அல்ல. வேறு என்னவாயிருக்கக் கூடும்? வானத்தை நோக்கினார். ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்த ஒரு தீப்பந்தம் வான வட்டத்தில் ஒரு கோணத்தில் பிரயாணம் செய்து கொண்டிருக்கக் கண்டார். அதன் பிரகாசம் அவருடைய கண்களைக் கூசச் செய்தது; கண்ணை ஒரு கணம் மூடிவிட்டுப் பிறகு திறந்து பார்த்தார். அந்தத் தீப்பந்தம் சிறிதாகிப் போயிருந்தது. வர வர ஒளி குறைந்து வந்தது; திடீரென்று அது மறைந்தே விட்டது. பழையபடி இருள் சூழ்ந்தது.

இந்த அதிசயம் என்னவாயிருக்கும் என்று பழுவேட்டரையர் சிந்தித்துக் கொண்டே மீண்டும் வானத்தை நோக்கினார். குறுகிய தூமகேது சற்று முன் இருந்த இடத்தைப் பார்த்தார். அங்கே அதைக் காணவில்லை. ஆகா! தூமகேது தான் விழுந்து விட்டது! இதன் கருத்து என்ன? இதன் விளைவு என்ன? உலகத்தில் ஏதேனும் விபரீதம் நடக்கப் போவதற்கு அறிகுறிதான். இராஜ குடும்பத்தினர் யாருக்காவது விபத்து நேரிடுவதற்கு அடையாளம். வால் நட்சத்திரம் மறையும்போது அரச குலத்தைச் சேர்ந்த யாரேனும் மரணம் அடைவார்கள் — இது வெகு காலமாக மக்களிடையே பரவியிருக்கும் நம்பிக்கை. அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது என்று சொல்லுவோரும் உண்டு. அதன் உண்மையும் பொய்மையும் நாளைக்குத் தெரிந்து விடும். நாளைக்கா? இல்லை! இன்றைக்கே தெரிந்து போய்விடும்!...

அதோ கீழ்வானம் வெளுத்து விட்டது. பொழுது புலரப் போகிறது! இன்று இரவுக்குள் மூன்று இடங்களில் மூன்று விபரீதப் பயங்கர நிகழ்ச்சிகள் நடைபெறக் கூடும். அவை நடக்கப் போகும் விவரம் நமக்கு மட்டும் தெரியும். அவற்றைத் தடுக்கும் சக்தியும் நமக்குத்தான் உண்டு. தடுப்பதில் வெற்றி பெற்றால் தூமகேது விழுந்த அபசகுனத்தைக்கூட வெற்றி கொண்டதாகும். இல்லாவிட்டால்.... அதைப் பற்றி எண்ணவே பழுவேட்டரையரால் முடியவில்லை. தடுத்தே யாகவேண்டும்! சோழர் குலத்தைச் சேர்ந்த மூவரையும் காப்பாற்றியே யாகவேண்டும்.

தமது முதல் கடமை, மிக முக்கியமான கடமை ஆதித்த கரிகாலனைக் காப்பாற்றுவதுதான்! அவனுக்கு விபத்து வந்தால் அதன் பழி தன் தலையில் நேராக விழும். ஆகையால் கொள்ளிடத்தைத் தாண்டிக் கடம்பூருக்கு உடனே போய்ச் சேர வேண்டும். அதற்கு முன்னால் குடந்தைக்குச் சென்று தஞ்சைக்கும் நாகைக்கும் எச்சரிக்கை அனுப்பி விட்டுப் போவது நல்லது. பின்னர் விதிவசம் போல் நடந்து விட்டுப் போகிறது. தாம் செய்யக் கூடியது அவ்வளவுதான்!

பழுவேட்டரையர் எழுந்திருக்க முயன்றார். உடம்பெல்லாம் ரணமாக வலித்தது; மரம் விழுந்திருந்த இடம் மார்பில் பொறுக்க முடியாத வேதனை உண்டாக்கிற்று. ஒரு கால் முறிந்துவிட்டதுபோல் தோன்றியது. தேகம் முழுவதும் பல்வேறு காயங்கள் பட்டிருந்தன.

அவற்றையெல்லாம் அந்த வீரக் கிழவர் பொருட்படுத்தவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு பெரு முயற்சி செய்து எழுந்து நின்றார். சுற்று முற்றும் பார்த்தார். நல்ல வேளையாக அவருடைய மரணத்துக்காகக் காத்திருந்த நரிகள் அதற்குள் ஓடிப் போய்விட்டிருந்தன. தூமகேது விழுந்தபோது உண்டான ஒளி வெள்ளத்தைக் கண்டு மிரண்டு அவை ஓடிப்போயின போலும்!

குடந்தை நகரம் அங்கிருந்து எந்தத் திசையில் இருக்கலாம் என்பதை ஒருவாறு நிர்ணயித்துக் கொண்டு புறப்பட்டார். திடமாகக் கால்களை ஊன்றி வைத்து நடக்கத் தொடங்கினார்.

வழியெல்லாம் புயல் அடித்து மரங்கள் விழுந்து கிடந்தன. பெரு மழையினாலும் கொள்ளிடத்து உடைப்பினாலும் வெள்ளக் காடாக இருந்தது. இந்த இடையூறுகளையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் பழுவேட்டரையர் நடந்தார். உள்ளத்தின் கொந்தளிப்பு உடலின் சிரமங்களையெல்லாம் மறந்து

விடச் செய்தது. ஆனாலும் நேரம் போய்க்கொண்டேயிருந்தது. பொழுது விடிந்து இரண்டு ஜாம நேரம் ஆன சமயத்தில் குடந்தை நகரை அவர் அணுகினார். அந்த மாநகரின் மத்தியப் பிரதேசத்துக்குப் போக அவர் விரும்பவில்லை. அவரை இந்தக் கோலத்தில் பார்த்தால் ஜனங்கள் வந்து சூழ்ந்துகொள்வார்கள். என்ன, ஏது என்று கேட்பார்கள்.. அவர் செய்ய விரும்பிய காரியத்தைத் துரிதமாகவும் திறமையாகவும் செய்ய முடியாமற் போய்விடும்.

—ஆகையினால் நகரின் முனையிலேயே ஜனநெருக்கமில்லாத இடத்தில் யாரையாவது பிடித்து, தஞ்சைக்கும் நாகைக்கும் ஓலை அனுப்ப வேண்டும். பிறகு ஒரு வாகனம் சம்பாதித்துக் கொண்டு கடம்பூருக்குக் கிளம்ப வேண்டும்.

துர்க்கை அம்மன் கோவிலுக்கு அருகில் உள்ள ஜோதிடரின் ஞாபகம் அவருக்கு வந்தது. ஆம்; அது தனிப்பட்ட பிரதேசம். அக்கம் பக்கத்தில் வேறு வீடுகள் இல்லை. ஜோதிடர் தகுந்த மனிதர்; நல் இயல்பு படைத்த மனிதர். ராஜ குடும்பத்துக்கும் முதன் மந்திரிக்கும் வேண்டியவர். அதனால் என்ன? யாராயிருந்தாலும் இந்தக் காரியத்தைச் செய்வார்கள். இராஜ குடும்பத்துக்கு வேண்டியவராயிருப்பதால் இன்னும் ஆர்வத்துடன் செய்வார். ஆகா! ஜோதிடருக்கு உண்மையில் ஜோதிடம் தெரியுமா? ஜோதிட சாஸ்திரத்தில் உண்மை உண்டா என்பதையும் இச்சமயத்தில் பரிசோதித்துப் பார்த்து விடலாம்.

அம்மன் கோவிலையும் ஜோதிடர் வீட்டையும் பழுவேட்டரையர் அணுகிச் சென்றார். கோவிலுக்கு முன்னாலிருந்த நெடிய பெரிய மரம் புயலில் முறிந்து விழுந்து கிடந்தது முதலில் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அடுத்தாற்போல் கோவிலை அடுத்து நின்ற இரட்டைக் குதிரை பூட்டிய ரதத்தின் பேரில் அவருடைய பார்வை விழுந்தது. அது விசித்திரமான அமைப்புள்ள ரதம். அந்த ரதத்தின் மேற்பகுதி ஓர் ஓடத்தைப் போல் அமைந்திருந்தது. வெள்ளம் வரும் காலங்களில் அவசரமாகப் பிரயாணம் செய்ய நேர்ந்தால் இம்மாதிரி ரதங்களை உபயோகப்படுத்துவார்கள். பெரிய நதிகளைக் கடக்கும் போது திடீரென்று நதியில் வெள்ளம் அதிகமாகி விட்டால் ஓடத்தை ரதத்திலிருந்து தனியாகக் கழற்றி விடலாம். குதிரைகளை அவிழ்த்து விட்டால் அவை நீந்திப் போய்க் கரை ஏறிவிடும். ரதத்தில் வந்தவர்கள் ஓடத்தைத் தள்ளிக்கொண்டு போய்க் கரை சேரலாம்.

இத்தகைய ரதங்கள் சோழ நாட்டில் அபூர்வமாகத்தான் உண்டு. இது யாருடைய ரதமாக இருக்கும்? அரண்மனை ரதமாக இருக்க வேண்டும்; அல்லது முதன் மந்திரியின் ரதமாக இருக்க வேண்டும். இதில் வந்தவர்கள் இப்போது ஜோதிடர் வீட்டுக்குள் ஜோதிடம் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலும். இவர்கள் யாராக இருக்கும்? ரத சாரதியைக் கேட்கலாமா? வேண்டாம்! அவன் நம்மைப் பார்த்து மிரண்டு போனாலும் போவான். ஜோதிடர் வீட்டுக்குள் நேரே பிரவேசித்துப் பார்த்து விடுவதே நலம். அங்கே வந்திருப்பவர்கள் யாராயிருந்தாலும் இந்த ரதத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டால் கடம்பூர் திரும்பிச் செல்ல வசதியாக இருக்கும் அல்லவா?

ஜோதிடர் வீட்டு வாசலுக்குப் பழுவேட்டரையர் வந்தபோது உள்ளே பெண் குரல்கள் கேட்டன. கிழவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. யாருடைய குரல்? ஏன்? இளைய பிராட்டி குந்தவையின் குரல் போல அல்லவா இருக்கிறது? அவள் எதற்காக இங்கே வந்தாள்? இந்தச் சமயம் பார்த்தா வரவேண்டும்? முதலில் இப்படி எண்ணியவர் உடனே மனத்தை மாற்றிக் கொண்டார். அவ்விதமானால், இளைய பிராட்டியாக இருந்தால் ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. குந்தவை தேவியின் காதில் விஷயத்தைப் போட்டு விட்டால் தம்முடைய பாரமே நீங்கியது போலாகும். அவளுடைய தந்தைக்கும் தம்பிக்கும் நிகழக் கூடிய ஆபத்தைப் பற்றிக் குறிப்பாகச் சொல்லி விட்டால் பிறகு அந்தச் சாமர்த்தியசாலியான பெண் வேண்டிய முன் ஜாக்கிரதை எடுத்துக் கொள்வாள். பிறகு தாம் நிம்மதியாகத் திரும்பிக் கடம்பூருக்குப் போகலாம். அங்கே யல்லவா தம்முடைய முக்கியமான கடமை இருக்கிறது?

பழுவேட்டரையர் ஜோதிடர் வீட்டு வாசலில் பிரவேசித்தபோது முன்னொரு தடவை நாம் பார்த்திருக்கும் அதே காவல்காரன் — ஜோதிடரின் சீடன்— அவரைத் தடுத்து நிறுத்தினான். பழுவேட்டரையர் அப்போதிருந்த கோலத்தில் அவரை அவனால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. ஆகையினாலேயே ''நில்!'' என்று அதட்டும் குரலில் கூறிவிட்டுத் தடுத்தான். பழுவேட்டரையர் ஒரு முறை ஹுங்காரம் செய்துவிட்டு அவன் கழுத்தைப் பிடித்துத் தள்ளினார். சீடன் குட்டிக்கரணம் அடித்துக்கொண்டுபோய் வீதியில் விழுந்தான். பழுவேட்டரையர் மதயானையைப்போல் பூமி அதிர நடந்து ஜோதிடரின் வீட்டுக்குள் புகுந்தார். (தொடரும்)

## அத்தியாயம் 37

ஒவ்வொரு நாளும் பாஸ்கரன் சாப்பிட வருவதற்காக யாமினி காத்திருக்கிற அழகே ஓர் இனிய கவிதையைப் போலத்தான் இருக்கும். எத்தனையோ நாட்களாகப் பிரிந்திருந்த கணவனை எதிர்பார்த்திருப்பவளைப் போல் அத்தனை ஆவலோடு, ஓரிடத்தில் இருப்புக் கொள்ளாமல் உள்ளுக்கும் வாசலுக்குமாய் நடை போட்டுக் கொண்டிருப்பாள். முந்தியெல்லாம் இதே போலப் பிள்ளையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த பார்வதியம்மாளுக்குக் கூட யாமினி தவிக்கிற தவிப்பைக் கண்டு பரிகாசமாய் இருந்தது. அது என்னவோ ஒரு பெண் இத்தனை வெளிப்படையாகத் தன் தவிப்பைக் காட்டிக் கொள்வது அவளுக்கே பாந்தமாகப்படவில்லை.

அவன் வருகிற வண்டியின் சத்தம் கேட்டாலே போதும்; அப்படி ஒரு பரபரப்பு; குறுகுறுப்பு. அவனைக் கண்டதுமே அப்படி ஓர் எக்களிப்பு; ஆனந்தம். சொன்னால் தெரியாது. பேச்சிலும் நடையிலும் என்னமோ ஒரு துள்ளல். ஒவ்வொரு நாளும் பாஸ்கரனுக்கு இது ஒரு தனி அநுபவம்.

அன்றைக்குப் பாஸ்கரன் சுரத்தாகவே இல்லை. சாப்பிட உட்கார்ந்த போதே அவனுக்கு அஜிதாவின் நினைவுதான் முந்திக் கொண்டு வந்தது. காலையில் அவளுக்குப் போன் செய்ததும், அது போதாதென்று அவள் வீட்டுக்கே போனதும் பெரிய முட்டாள்தனமாகப் பட்டது. ஒரு மாதத்துக்கு மேல் அவள் வீட்டுப் பக்கமே தலைகாட்டாமல் பெற்றிருந்த கௌரவத்தையெல்லாம் இன்றைக்கு வீணாக இழந்து விட்டது போல் ஒரு கசப்பு உண்டாயிற்று.

"சரியாகச் சாப்பிடாமல் இது என்ன யோசனை?" என்று கேட்டாள் யாமினி.

அப்போதே காரணத்தைச் சொல்லியிருக்கலாம். என்னவோ ஓர் அலுப்பு. சொல்வதையும் பொருத்தமாகச் சொல்ல வேண்டும். அவ்வளவுக்குப் பொறுமையில்லை; பிடிக்கவும் இல்லை. முதல் நாள் ராத்திரியெல்லாம் அத்தனை ஆத்திரமாகப் பேசிவிட்டு, இன்றைக்கு அவளைத் தேடிக் கொண்டு போனதாகச் சொன்னால், என்ன வெட்கக்கேடு! அதனால் சும்மா இருந்து விட்டான்.

ஆனால் உள்ளூற ஓர் உறுத்தல் இருந்தது. பண விஷயம் பேச வேண்டும் என்கிற எண்ணத்தில் அவன் அஜிதாவைப் பார்க்கப் போகவில்லை. அவன் போன காரணமே வேறு. அன்றொரு நாள் அவளைத் தேடிக் கொண்டு காரில் வந்தவனைப் பற்றி அவனுக்குச் சந்தேகம் இருந்தது. அந்தச் சந்தேகம் நேற்று ராத்திரி யாமினி சொல்லித்தான் தீர்ந்தது. வந்தவன் அவளுடைய கணவன் என்பதைத் தெரிந்து கொண்டது முதல் மனத்திலிருந்த பெரிய சுமை நீங்கியது போல் இருந்தது. அப்படிச் சந்தேகப்பட்ட



தற்குப் பிராயச்சித்தமாகத்தான் அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வர எண்ணிப் போனான். ஆனால் அஜிதா பண விஷயமாகப் பேச வந்திருப்பதாக எண்ணியிருக்கலாம். அப்படி இளப்பமாக நினைத்துத்தான் அலட்சியமாக நடந்து கொண்டாளோ என்று அவனுக்கு ரோசமாக இருந்தது. 'எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொண்டு போகட்டும். இனி இவளைப் போய்ப் பார்க்கப் போவதில்லை' என்று முடிவு செய்து கொண்டான்.

அஜிதாவைச் சுற்றியே வந்து கொண்டிருந்த எண்ணம் அன்றையத் தபாலில் வந்த கடிதம் ஒன்றைப் பார்த்த பிறகு போன இடம் தெரியவில்லை. அந்தக் கடிதத்தை அவன் எதிர்பார்க்கவேயில்லை. அநேகமாக அது வரவே வராது என்று கைவிட்டு விட்ட சங்கதி. அவன் திட்டமிட்டிருந்த புது முயற்சிக்கு இந்திய சர்க்காரின் அனுமதி கிடைத்து விட்டது என்றால் அதைவிட ஆச்சரியம் வேறு என்ன இருக்க முடியும்? அந்த அனுமதியையும் பதிவுத் தபாலில் வந்த லைசென்ஸையும் பார்த்த போது அவனால் இந்த அதிசயத்தை முதலில் நம்பவே முடியவில்லை. கண்ணைத் துடைத்துக் கொண்டு, கையைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டு ஒரு முறைக்குப் பல முறையாகப் படித்த பிறகுதான் நம்பிக்கை உண்டாயிற்று. உள்ளத்தில் உற்சாகம் பொங்கிக் கொண்டு வந்தது. அதே சமயத்தில் திடீரென்று இதற்கெல்லாம் மூல காரணமாக இருந்த ஹரி நாராயண் குப்தாவின் நினைவு தோன்றிக் கண்ணீரைப் பெருக்கி விட்டது. அந்த ஹரியின்



தந்தைக்கு இதை உடனே தெரியப்படுத்தினால்தான் மனசு ஆறும் போலிருந்தது. ஹரி நடத்திக் கொண்டிருந்த கடிதப் போக்குவரத்துக்களையெல்லாம் அப்படியே அனுப்பி வைத்தவர் ஆயிற்றே அவர்! ராஜேஷைக் கூப்பிட்டுத் தந்தியை அனுப்பச் சொன்ன பிறகு தான் அவனுக்கு மனசு அடங்கியது; உற்சாகம் மூண்டது. அந்த உற்சாகத்தை வெளியில் வேறு யாரிடம் போய்க் காட்டிக் கொள்ள முடியும்? அதனால் வீட்டுக்கு டயல் செய்தான்.

"ஹலோ, யாமினி! உன்னை இன்னிக்கு என்ன செய்யப் போறேன், தெரியுமா? அப்படி இருக்கு எனக்கு இப்ப!"

"என்ன விஷயம், நான் என்ன தப்புச் செய்து விட்டேன் அப்படி?"

"தப்பு இன்னிக்குச் செய்ததாகவா சொன்னேன்? ரெண்டு மாசத்துக்கு முந்தி செய்த தப்பைச் சொல்றேன்!"

யாமினிக்கு அவன் சொல்வது புரியவில்லை. "ரெண்டு மாசத்துக்கு முந்தி நான் என்ன செய்தேனும்?"

"நீ செய்த தப்பு உனக்கே தெரியல்லியா? நன்னு யோசனை பண்ணிப் பார். அப்பவும் தெரியல்லேன்னு உன் வயிற்றைத் தொட்டுப் பார்த்துச் சொல்லு. டாக்டர் மிஸஸ்ஆம்புரோஸ் உறுதியாகச் சொன்ன தப்பைத்தான் சொல்றேன்!"

"மாசக் கணக்கைத் தப்பாச் சொல்றேளே. மாசம் மூணு ஆச்சே! நான் செய்த தப்புன்னு சொல்றேளே......!"

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. இதோ என் கையிலே ஒரு தபால் இருக்கு. அதுக்கு அந்தத் தப்புத்தான் காரணம். நான் ஒப்புக் கொள்றேன். நேத்திக்கு நீ சொன்னபோது கூட எனக்கு அப்படித் தோணல்லே. இப்பத்தான் அது எனக்குச் சரியாப்படறது. இதுக்கு மேலே இப்ப ஒண்ணும் கேட்காதே. எல்லாம் நேரிலே வந்து பேசிக்கறேன். இதுக்காகவே இன்னிக்குச் சீக்கிரம் வரணும்னு இருக்கேன்" என்று கடைசிவரை மர்மமாகவே பேசிவிட்டுப் போனை வைத்தான் பாஸ்கரன்.

'பாவம். என்னமோ ஏதோன்னு அவளுக்குத் தவிப்பாக இருக்கும். ஒரு வேலையும் ஓடாது அவளுக்கு. அவள் தவிக்கிற தவிப்பை நேரிலேபோய்ப் பார்க்கணுமே!' என்று தனக்குத்தானே பேசிக் கொண்டு சுழல் நாற்காலியைச் சுழற்றித் திருப்பினான். அங்கே ராஜேஷ் வந்து நிற்பதைக் கண்டதும் அவனுக்கு மகா வெட்கமாகப் போய் விட்டது.

"ஓ..... என்ன......?"

"யாரோ ஒரு லேடி உங்ககிட்டே பேசணும்னு....."

"நோ நோ. இப்ப வேண்டாம். இன்னும் சித்த நேரத்திலே நான் வீட்டுக்குப் போயிண்டே இருக்கேன். அப்புறம் பேசச் சொல்லு!"

"ஆகட்டும், ஸார்!"

"ராஜேஷ்... இங்கே வா. வந்து இந்தக் கடிதத்தைப் பத்தி இப்ப வேறே யாருக்கும் தெரிய வேண்டாம். என்ன, இது நம்மோடே இருக்கட்டும்......"

"சரி, சார்!"

ராஜேஷ் போன பிறகு அந்த லேடி நேரில் வந்திருந்தாளா, போனில் பேசினாளா என்று கேட்காமல் போனோமே என்று நினைத்துக் கொண்டான். லேடி என்றால் ஒரு சமயம் வெளிநாட்டுப் பெண்ணாக இருப்பாளோ என்ற எண்ணமும் உண்டாயிற்று.

'எப்படி இருந்தாலும் சரி, அவள் யாராக இருந்தாலும் சரி, கவலையில்லை. வீட்டுக்குத்தான் முதலில்' என்று கடிதத்தைத் தோல் பையில் வைத்து எடுத்துக் கொண்டு புறப்பட்டான். யாமினியைப் பிரமிக்க வைக்கும்படி ஏதாவது வாங்கிக் கொண்டு போக வேண்டும் என்று ஓர் எண்ணம் தோன்றிற்று. ஆனால் என்ன வாங்குவது என்றுதான் தெரியவில்லை. அவளைப் பிரமிக்க வைக்கக்கூடிய பொருள் எதுவும் இருப்பதாக அவனுக்குப் படவில்லை. பாஸ்கரன் ஒருவனைத் தவிர அவளுக்கு வேறு எதிலுமே அக்கறையில்லை. அது எத்தனை உயர்ந்ததாக இருந்தாலும் எந்தப் பொருளும் அவளுக்கு இரண்டாம் பட்சம்தான். அவனுடைய அன்பு ஒன்றைத் தவிர வேறு எதுவுமே அவளுக்கு இலட்சியமில்லை. அந்த ஒருவிதத்தில் அவனுக்குப் பெருமைதான். மவுண்ட்ரோடு, டவுன் எல்லாம் சுற்றிவிட்டுக் கடைசியாக அவளையே அழைத்துக் கொண்டு போய் வாங்கலாம் என்று வீட்டைப் பார்க்க வந்தான்.

வண்டிச் சத்தம் கேட்டதுமே எட்டிப் பார்க்கிற நிலவு முகத்தை இன்று காணாதது அவனுக்கு என்னவோ போல இருந்தது.

நேரே அவள் இருந்த அறைப் பக்கம் போனான். யாமினியின் முகத்தில் வழக்கமாக மலர்கிற முறுவலைக் காணாதது இன்னும் ஏமாற்றமாக இருந்தது. அவளுக்கு எதிரில் போய் நின்றவண்ணம் அவளையே கூர்ந்து கவனித்தான்.

"வழக்கத்தைவிடச் சீக்கிரமா வந்திருக்கேன். நீ சந்தோஷப்படக் காணுமே!"

"ஆமாம்; சந்தோஷம் வரல்லே; படல்லே!"

"சரி, இதைப் படிச்சுப் பாரு. அப்புறமாவது சந்தோஷம் வரதா,

இல்லையான்னு பார்க்கலாம்!'' என்று தோல் பையிலிருந்த சர்க்கார் கடிதத்தை அவள் மடியில் எடுத்துப் போட்டான்.

யாமினி அதைப் பிரித்து நிதானமாகப் படித்தாள். முகத்தில் துளிச் சலனமும் ஏற்படவில்லை. படித்து முடித்ததும் அதை ஜாக்கிரதையாக மடித்து அவனிடமே கொடுத்தாள்.

''ஒண்ணும் சொல்லாமல் திருப்பிக் கொடுத்தால்......?''

''சொல்ல என்ன இருக்கு? எல்லாம் நான் போனிலேயே பேசியாச்சே!''

''ஓ! அப்ப நான் இவ்வளவு அவசரமா வந்திருக்கவேண்டாம், இல்லையா?''

''இப்படி வரப் போறது தெரிஞ்சிருந்தால் நான்கூட வந்தவளை இன்னும் கொஞ்ச நேரம் இருக்கச் சொல்லியிருப்பேன்!''

''யாரைச் சொல்லறே?''

''அஜிதாவைத்தான்!''

அவள் பெயரைக் கேட்டதும் தூக்கிவாரிப் போட்டது பாஸ்கரனுக்கு.

''அவள் வந்திருந்தாளா, என்ன, இங்கே?''

''நீங்க போயிருந்தேளாமே அங்கே?''

''ஓ! அதுக்காகவேவந்தாளாக்கும்!''

''வந்துடப் போறாளேன்னு கவலையாயிருந்ததோ? சாப்பிடற போதெல்லாம் அந்த யோசனைதான் போலிருக்கு!''

''டோன்ட் பீ ஸில்லி! நான் எவ்வளவோ சந்தோஷமா வந்திருக்கேன். அதைக் கெடுத்துடாதே! நான் என்னமோ நினைச்சண்டு அவள் வீட்டுக்குப் போனேன். என்னமோ நினைச்சிண்டு திரும்பி வந்தேன். தினம் எங்கெங்கெல்லாமோ போறேன். எல்லாத்தையும் உங்கிட்டே சொல்லிண்டா இருக்கேன்? அது போல இது ஒண்ணு. 'அப்செட்' ஆகாதே! எங்கேயாவது வெளியே போய்ச் சுற்றிவிட்டு வரலாம் வா. அவள் பேச்சை அப்படியே எடுத்துக்காதே. உனக்கு அவள் குணம் தெரிஞ்சிருக்கணும். ஏமாறக் கூடாது.''

சட்டென்று யாமினியின் முகம் மலர்ந்தது. ''அப்படித்தான் நினைச்சேன், நானும்!''

''எனக்குத் தெரியும். அப்படி நினைச்சதுதான் சரி. புறப்படு, எங்கேயாவது போகலாம்!''

''யூ ஆர் மை டார்லிங்!'' என்று எழுந்து போனாள் யாமினி.

## அத்தியாயம் 38

**யா**மினியும் பாஸ்கரனும் எப்பொழுது வெளியில் சேர்ந்து புறப்பட்டாலும் பார்வதியம்மாளுக்குத் தன் கண்ணே பட்டுவிடுமோ என்று அத்தனை விசாரமாக இருக்கும். அவர்கள் திரும்பி வந்ததும் திருஷ்டி சுற்றிப் போட வேண்டும் என்று நினைத்துக் கொள்வாள். அவர்கள் என்னதான் தடுத்தாலும் என்றாவது ஒரு நாள் அவர்களைப் பிடிவாதமாய்க் கிழக்குப் பார்க்க உட்கார வைத்துச் சுற்றிப் போடுவாள். அப்படியெல்லாம் நினைக்கிறவள் இன்றைக்கு அவர்கள் சொல்லிக் கொண்டு புறப்பட்ட போது அத்தனை அக்கறைப்படவில்லை.

''இன்னிக்கு அம்மா சரியாப் பேசல்லே, எங்கிட்டே!'' என்றாள் யாமினி, வண்டியில் ஏறிக் கொண்டதும். ''நாம போறது பிடிக்கல்லே போலிருக்கு!''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லே. எனக்குக் காரணம் தெரியும். நீ வா, பேசாமல்!'' என்றான் பாஸ்கரன்.

''என்ன காரணம்?''

''அந்த அஜிதா வந்துட்டுப் போனதுதான் காரணம்! அவள் வந்துட்டுப் போனதிலேயிருந்துதானே சரியாப் பேசல்லே?''

''அதான் போலிருக்கு! மத்தியானமெல்லாம் சரியாய்த்தான் பேசிண்டிருந்தார். டாக்டரைப் போய்ப் பார்த்துட்டு வான்னுகூடச் சொன்னாரே. இப்பத்தான் சரியாப் பேசல்லே. நீங்க சொல்றது சரிதான்!''

''இன்னும் அவளுக்கு அந்தச் சபலம் போகல்லே. எல்லாத்தையும் மறந்துட்டிருந்தவள் இன்னிக்கு அவளைப் பார்த்ததும் நினைவு வந்திருக்கும். என்ன இருந்தாலும் அண்ணாவோட பெண் இல்லையா? அவள் தனக்கு நாட்டுப்பெண்ணாக வரல்லியேன்னு ஓர் ஏக்கம் வந்திருக்கும்!''

''இத்தனை வருஷங்களுக்கு அப்புறமா? எங்கிட்டே பழகி, என் குணம் எல்லாம் தெரிஞ்சதுக்கு அப்புறமுமா?''

''என்ன இருந்தாலும் பழைய ஞாபகம் துளியாவது வராமல் போகுமா? அண்ணாவோட அத்தனை சொத்தும் கையை விட்டு வேறே யாருக்கோ போயிடுத்தே என்கிற வருத்தம்தான்!''

''ம்ம்....'' என்று பெருமூச்செறிந்தாள் யாமினி.

''உங்கிட்டே மட்டும்தான் சரியாப் பேசல்லேன்னு நினைக்காதே. எங்கிட்டேயும் அப்படித்தான். நான் வந்ததுமே நீ மூஞ்சியைத் தூக்கி வச்சிண்டிருந்தே. அப்புறம் அம்மாவும் மூஞ்சியைத் தூக்கி வச்சிக்கிறப்பலே இருக்கேன்னு நினைச்சிண்டேன்!'' என்றான் பாஸ்கரன்.

''சரி; முதல்லே டாக்டரைப் பார்த்துட்டுப் போவோம்!''

'' ஏன், போகணுமா என்ன?''

'' சும்மாத்தான்! டாக்டர் ஒரு நாளைக்கு உங்களைப் பார்க்கணும்னு சொன்னாள். அழைச்சிண்டு வரதாச் சொல்லியிருக்கேன்!''

''என்னை எதுக்கு... நீ எதுக்கு...?''

''குற்றவாளியை அவளுக்கு அறிமுகம் செய்து வைக்க!''

''அப்படியானால் நான் உள்ளே வர மாட்டேன். வண்டியிலேயேதான் உட்கார்ந்திருப்பேன்!''

'' உங்க ஜம்பமெல்லாம் எனக்குத் தெரியும். இன்னிக்குப் பார்க்கல்லியா அதை! பேசிக்காதிங்கோ!''

'' பார்க்கலாமா அதையும்?''

'' ஓ! பார்க்கலாம்!''

கடைசியில் யாமினி சவால் விட்ட படிதான் நடந்தது. அவன் வந்திருப்பது தெரிந்ததும் டாக்டரே எழுந்து வந்து விட்டாள். அப்புறம் போகாமல் என்ன செய்வது? பரஸ்பரம் உபசாரமாகப் பேசிக் கொண்டார்கள். வெளியில் வந்த பிறகுதான் யாமினி அவனைப் பரிகாசம் செய்ய நினைத்தாள். ஆனால் அவன் முகத்தைப் பார்த்ததும் அந்த எண்ணம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. பாஸ்கரன் கண்கள் இரண்டும் அப்படிக் கலங்கிப் போயிருந்தன. முகம் வாட்டமுற்றிருந்தது.

''ஏன், என்ன திடீர்னு?'' என்று பதறிப் போனாள் யாமினி.

'' ஊஹூம்; ஒண்ணும் இல்லே!'' என்று அவன் கண்களைத் துடைத்துக் கொண்டான். பிறகு, '' என்னை ஏன் அங்கே அழைச்சிண்டு போனே? எனக்கு இந்தத் தண்டனை வேண்டியது தான்! நான் இன்னிக்கு ஹரிநாராயணனை மட்டும்தான் நினைச்சேன். சோபனா ஜோஷியை நினைக்கல்லே. நியாயமா நினைச்சிருக்கணும்; மறந்துட்டேன். அதுக்குத்தான் இந்தத் தண்டனை. சோபனா ஜோஷியும் ஒரு டாக்டர். குழந்தை மருத்துவத்தில் அவள் ஒரு ஸ்பெஷலிஸ்ட்! டாக்டர்னா அவள் தான் எனக்கு டாக்டராகப் பட்டாள். வேறே யாரும் எனக்கு டாக்டராகவே படறதில்லே '' என்றான்.

'' அப்ப இங்கே வந்ததும் நல்லதாத்தான் போச்சு. இங்கே வரல் லேன்னா அந்தச் சோபனா ஞாபகம் வந்திருக்குமா?'' என்றாள் யாமினி.

அங்கிருந்து அவர்கள் ஸ்பென்சருக்குப் போனார்கள்; 'லேடீஸ் வேர் அன்ட் கார்மென்ட்ஸ்'க்குப் போனார்கள். என்ன என்னவெல்லாமோ வாங்கினார்கள். தாய்மைப் பேறு இலக்கியங்கள், புத்தகங்கள், போட்டோ ஆல்பங்கள், கலையழகு பொருந்திய பொருள்கள், விலை உயர்ந்த தனி ஆடைகள் எல்லாம் வாங்கினார்கள். யாமினிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. ஜாடையாக விலகி நின்றாலும் பாஸ்கரனுக்கு ஏதாவது புரிந்தால் தானே?

'' பார்க்கப் போனால் அது லேடீஸ் டிபார்ட்மெண்ட். நீங்கள்ளாம் அங்கே வரவே படாது!'' என்றாள் யாமினி, வெளியில் வந்த பிறகு.

''இதை அப்பவே சொல்றதுதானே! அது போகட்டும்; இப்ப உன்னோடே நானும் வரக் கூடிய இடமாச் சொல்லு; போகலாம். ஏதானும் படத்துக்குப் போனால் என்ன?''

''ஐயையோ, வேண்டாம். நல்ல மாலைப் பொழுதைக் கெடுத்துக்குவானேன்? வில்லன், வேதனை, கொலைகள், ஆபாசம் இந்தப் பரபரப்பெல்லாம் ஒரு பொழுதுபோக்கா? எங்கேயானும் ஆனந்தமாய், தனியாய், ஜிலுஜிலு என்று கடற்கரைப் பக்கம் போய் உட்கார்ந்துட்டு வீட்டுக்குப் போகலாம்.''

வண்டியைக் கடற்கரைச் சாலையிலே நிறுத்தி விட்டு இருவரும் கரையோரத்துக்குக் காலாற நடந்து சென்றார்கள்.

''கூட்டமில்லேயேன்னு பார்த்தால் இடம் மோசமாயிருக்கு. இங்கே எப்படி உட்காருவது?'' என்றாள் யாமினி.

'' நல்ல இடமா இருந்தா சும்மா விட்டுடுவாங்களா? கூட்டமும் இருக்கப் படாது; இடமும் நன்னா இருக்கணும்னா மரீனா பீச்சுக்கு வரப்படாது. அந்தக் காலமெல்லாம் போயிட்டுது. வா, வண்டியிலேயே போய் உட்காருவோம்!'' என்றான் பாஸ்கரன்.

அவர்கள் வண்டியில் போய் உட்காருவதற்கும் அடுத்தாற்போல் ஒரு வண்டி வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. பாஸ்கரனும் யாமினியும்தான் அந்த வண்டியிலிருந்த அஜிதாவைக் கவனித்தார்களே தவிர, அவள் இவர்களைக் கவனிக்கவில்லை.

'' சரியாப் போச்சு போ! இங்கேயும் இருக்க வழியில்லே'' என்று வண்டியைச் சத்தம் போடாமல் கிளப்பினான் பாஸ்கரன்.

'' இன்னிக்கு ஒண்ணுமே சரியாய் இல்லே. வீட்டுக்கே போய்ச் சேருவோம்!'' என்று சொன்னாள் யாமினி.

வீட்டிலே அவர்களுக்காக ஒரு தந்தி காத்திருந்தது. யாமினியின் அத்தை காலை மெயிலில் வருவதாக அவளுடைய அப்பா தந்தியடித்திருந்தார்.

''இதுக்கு அழகா முந்தியே ஒரு கார்டு எழுதிப் போடப்படாதோ? தந்தி என்ன வேண்டிக் கிடக்கு — மனசைக் கலக்கிறுப்படலே!'' என்று அலுத்துக் கொண்டாள் பார்வதியம்மாள். (தொடரும்)

# இயற்கையை வென்று சரித்திரம் கண்டோம்!



**1880**ல் பிரெஞ்சு நாட்டினர் பனாமாக் கால்வாயை வெட்ட முற்பட்டனர். பலன்: மலேரியாவுக்கு இருபதாயிரம் உயிர்கள் பலி! முயற்சி கைவிடப்பட்டது.

இந்தப் பணியை மேற்கொண்டவர் ஃபெர்டினண்ட் லெஸ்ஸெப்ஸ். சூயஸ் கால்வாயை வெட்டி வெற்றி கண்டவர் இவர். இந்தமேதையே முடியாது என்று கைவிட்டு விட்ட பின்னர் யாருக்குத்தான் பனாமா கால்வாயை வெட்டும் வேலையை மேற்கொள்ளத் துணிவு வரும்?

ஆயின் அந்தத் துணிவும் ஏற்படத்தான் செய்தது. அறுபதாயிரம் ஊழியர்கள் முடியும் என்று வீராப்புடன் காரியத்தில் இறங்கினர். 1903ல் வேலை தொடங்கியது. பொறி இயல் பிரச்னைகளை மலை போன்றவை, கடக்க முடியாதவை எனக் கருதப்பட்டன. போதாக் குறைக்குக் கடுமையான வெய்யிலையும், கொசுக்களால் பரவும் மலேரியா, மஞ்சள் ஜுரம் (மஞ்சள் காமாலையை விடக் கொடிய . நோய்) ஆகியவற்றையும் வேறு சமாளிக்க வேண்டியிருந்தது. நம்பவே முடியாத அளவுக்கு இவை தொல்லை கொடுத்தன.

ஆயினும் அறுபதாயிரம் ஊழியர்கள் மனம் தளரவில்லை. தோண்டி எடுக்கப்பட்ட மண்ணையும் கல்லையும் கொண்டு போக நூற்று நாற்பது ரயில்கள் பயன்படுத்தப்பட்டன. 95 இயந்திர மண் வெட்டிகள் உபயோகத்தில் இருந்தன. அறுபது மிலியன் டன் டைனமைட் வெடி மருந்து பாறைகளைத் தகர்க்கப் பயன்படுத்தப்பட்டது. 1914ல் பதினொரு ஆண்டு உழைப்புக்குப் பின் நடவாத காரியம் என்று கருதப்பட்ட பனாமா கால்வாய் கண்ணுக்கு மெய்யாகக் காட்சி தந்தது. அட்லாண்டிக் மகா சமுத்திரமும் பசிபிக் மகா சமுத்திரமும் இணைக்கப்பட்டதன் விளைவாக உலக வியாபாரப் போக்குவரத்து மார்க்கங்களில் இமாலய மாற்றங்கள் ஏற்பட்டன.

பனாமா கால்வாய் அமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்து ஓய்வு பெற்ற மேஜர் ஜெனரல் எட்கர்டன் கூறுகிறார்:

"டாக்டர் வில்லியம் கோர்காஸ் பிரதம சுகாதார அதிகாரியாக இருந்தார். அவர் மஞ்சள் ஜுரத்தையும் மலேரியாவையும் அப்பகுதியிலிருந்து ஒழிப்பதையே தம் வாழ்க்கை லட்சியமாகக் கொண்டார். அவரும் அவரது சகாக்களும் பனாமாவில் இருந்த குளம் குட்டைகள் எல்லாவற்றிலும் கொசு உற்பத்தியைத் தடுக்க எண்ணெயை ஊற்றினார்கள். ஒவ்வொரு தொழிலாளியும் ஜுரமிருந்ததோ இல்லையோ, குறிப்பிட்ட அளவு குயினைன் மருந்தைக் கண்டிப்பாகச் சாப்பிட்டாக வேண்டும் என்று நிர்ப்பந்தித்தோம். பாம்பு தேள் எதுவும் என்னைக் கடிக்கவில்லைதான்; எனினும் திரும்பிய பக்கமெல்லாம் அவைகளைக் காணலாம்!"

அந்நாளில் அந்த வட்டாரத்தில் கவர்னராக விளங்கிய மாஸ்வெல் தாட்சர் கூறுகிறார்: "உலக சரித்திரத்தில் மனிதன் இயற்கையை எதிர்த்து நிகழ்த்திய மிகப் பெரிய போராட்டம் பனாமா கால்வாயை வெட்டியதுதான்!"

* * *

ஈரி கால்வாய் ஐக்கிய அமெரிக்காவின் வடகிழக்கில் உள்ள மாபெரும் ஏரிகளை அட்லாண்டிக் கடலுடன் இணைக்கிறது. டிவிட் க்ளின்டன் என்பவர் இக்கால்வாயை வெட்டுவது சாத்தியமே என்று சவால் விட்டார். மக்கள் 'செய்து காட்டு' என்று கூறும் முகமாக அவரை நியூயார்க் மாநில கவர்னராகத் தேர்ந்தெடுத்தனர். 1817ல் வேலை ஆரம்பமாயிற்று. அக்காலத்தைப் பொறுத்தவரை மனிதனால் வெட்டப்பட்ட மிக நீண்ட கால்வாய் இதுவாகவே இருந்தது. குன்றுகளை ஊடுருவியும், ஆறுகளைக் கடந்தும், சதுப்பு நிலங்களினூடேயும் வளர்ந்தது வாய்க்கால். இச்சதுப்பு நிலப் பகுதியில் முப்பத்தைந்து மைல் நீளத்துக்கு முழுக்காளம் விரித்தாற்போல் கொசுப் பட்டாளம் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

வியாபாரப் போக்குவரத்தில் ஒரு புதிய சகாப்தத்தை ஆரம்பித்து வைத்தது ஈரி கால்வாய். 1825 அக்டோபர் 25ந் தேதி — ஈரி கால்வாயின் திறப்பு விழாவினை — பொட்டி அன்றையத் தினத்தை அமெரிக்க அரசு தேசிய விடுமுறை என அறிவித்தது என்றால் அச்சாதனையின் மகத்துவம் புரியும்.



# தங்கக் கோப்பை விஜயம்!



பம்பாய் சர்வகலாசாலை கோஷ்டியினருக்கும் சென்னை சர்வகலாசாலை கோஷ்டியினருக்கும் இறுதியாட்டம் ஆரம்பிப்பதற்கு முந்தின நாள் ஆந்திர சர்வகலாசாலை துணைவேந்தர் திரு எல். புல்லையா தமது இல்லத்தின் புல்வெளியில் விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். சென்னை சர்வகலாசாலை கோஷ்டியினர் வந்தபோது அவர்கள் கண்கள் வியப்பால் விரிந்தன. துணைவேந்தரின் இல்லத் துணைவியார் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர். அவர் தமிழ்நாட்டுக் கிரிக்கெட் ஆட்டக்காரர்களின் கண்ணில் படும்படியாக ரோஹின்டன் பாரியா தங்கக் கோப்பை தகதகவென்று ஜொலிக்கும்படி ஒளிவிளக்கில் வைத்திருந்தார். அதைப் பார்த்தவுடனே சென்னை சர்வகலாசாலை கிரிக்கெட் கோஷ்டியின் காப்டன் ரவிச்சந்திரனுக்கும் அவரது சகாக்களுக்கும் எப்படியாவது இந்தப் பிரும்மாண்டமான தங்கக் கோப்பையைச் சென்னைக்குக் கொண்டு போய்விட வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. ஆவல் எழுந்தால் மட்டும் போதுமா? 1934ம் வருஷத்திலிருந்து முப்பத்தாறு வருஷங்களாக அந்த ஆசை நிறைவேறவில்லை. பம்பாய் தொடர்ந்து அதைப் பல வருடங்கள் பெற்று வருகிறது. இதை நிறைவேற்றுவது மிகக் கஷ்டமான காரியமாயிற்றே.

செமி பைனலில் கல்கத்தாவோடு ஆடும்பொழுது வெற்றி எந்தப் பக்கம் சாயுமோ என்றநிலையில் இருந்துகொண்டே யிருந்தது. சென்னை சர்வகலாசாலை கோஷ்டிக்கு இறுதி வரை ஒரே போராட்ட மயம்தான்!

மேலிருந்து கீழாக :
பார்க்கவ் மேதா.
சிவராமகிருஷ்ணன்.
காப்டன் ரவிச்சந்திரன்.

புகைப்படம் :
வெற்றி பெற்ற சென்னை சர்வகலாசாலை கிரிக்கெட் கோஷ்டியினரும் மானேஜர் ஜே. எஸ். ராவும்.

கடைசிநாள் கடைசி பாட்ஸ்மன் ஐந்து ரன்கள் எடுத்தால் வெற்றிபெற முடியும் என்ற மயிரிழையில் வெற்றி ஊசலாடியது. ஒரு ரன் ஓடிய பிறகு, ராம்மோஹன் ஒரு பவுண்டரி அடித்துச் சென்னை சர்வகலாசாலை கோஷ்டிக்கு உயிரும் வெற்றியும் கொண்டுவந்தார்! ராம்மோஹன் அடித்த பந்தை கல்கத்தா கோஷ்டி பௌலர் பிடிக்க முயன்ற முயற்சி வெற்றி பெற்றிருந்தால்....? நல்ல வேளை, அது நடக்கவில்லை!

கடைசியாக பம்பாய் சர்வகலாசாலை கோஷ்டியினரோடு இறுதியாட்டத்தில் காப்டன் ரவிச்சந்திரனோடு அவரது சகாக்கள் முழுமூச்சுடன் பாடு



பட்டார்கள். முப்பத்தாறு வருஷங்களாக நிறைவேறாத ஆசை நிறைவேறிற்று. சென்னை சர்வகலாசாலை பாட்ஸ்மன்கள் சிவராமகிருஷ்ணனும் முகுந்தும் சதரன்களுக்குமேல் எடுத்துக் குவித்தார்கள். 'பௌலிங் புலி' பார்க்கவ் மேத்தா முதல் இன்னிங்ஸில் ஏழும், இரண்டாம் இன்னிங்ஸில் ஏழும் ஆக பதினான்கு விக்கெட்களை வீழ்த்திக் காட்டினார்.

**காப்டன் ரவிச்சந்திரன் பேசுகிறார் :**

நான் ஸெயின்ட் பீட்ஸ் பள்ளியில் படிக்கும்பொழுதே கிரிக்கெட் ஆட்டத்தில் முழுமூச்சுடன் ஈடுபட்டேன். தமிழக ராஜ்ய ஸ்கூல் கிரிக்கெட் கோஷ்டியில் ஆடி யிருக்கிறேன். 1965–66ம் ஆண்டில் 'தமிழகத்தின் தலைசிறந்த மாணவ கிரிக்கெட் வீரர்' என்ற பட்டத்தைப் பெற்றிருக்கிறேன். அதனால் படிப்பில் சோடை என்று நினைத்து விடாதீர்கள்! குருவில்லா ஜேகப் விளையாட்டு — கல்வி பரிசு கிடைத்திருப்பதால் இரண்டிலும் மிகுந்த அக்கறை செலுத்தி வருகிறேன் என்பதை அறியலாம். இப்பொழுது அழகப்பா தொழில் நுணுக்கக் கல்லூரியில் 'பி. டெக்'கில் கடைசி வருஷ மாணவன். என் தந்தை கோடக் பிராந்திய மானேஜர் ஸ்ரீ ராமமூர்த்தி அவர்கள் என் கிரிக்கெட் திறமை வளரப் பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டிருக்கிறார். கிரிக்கெட் பாட், உபகரணங்கள் எல்லாம் இங்கிலாந்திலிருந்து எனக்கு வரவழைத்துக் கொடுத்து என் கிரிக்கெட் ஆர்வத்தை வளர்க்கிறார். திருவல்லிக்கேணி கிரிக்கெட் கிளப்பின் காப்டன் நான். என் கோஷ்டியில் எல்லோரும் 'டீம் ஸ்பிரிட்'டோடு ஆடியதால் எங்களுக்கு இந்த வெற்றி கிடைத்தது.

**ஸ்டார் பாட்ஸ்மேன் சிவராம கிருஷ்ணன் சொல்கிறார் :**

எங்கள் குடும்பம் 'கிரிக்கெட் குடும்பம்'. ஒரு கோஷ்டிக்கு வேண்டிய பதினொரு பேர் என் குடும்பத்திலேயே கிடைப்பார்கள்! நான் விவேகானந்தா கல்லூரியில் பி.காம் இரண்டாம் வருஷம் பயில்கிறேன். மயிலாப்பூர் ரிக்ரியேஷன் கிளப் செகண்ட் டிவிஷனுக்கு இப்பொழுது ஆடி வருகிறேன். நான், 'பாட்டிங்'கில் விசேஷ கவனம் செலுத்துகிறேன். ரோஹின்டன் கோப்பைப் பந்தய இறுதி ஆட்டத்தில் நூற்றுப் பன்னிரண்டு ரன்கள் எடுத்ததனால் இப்பொழுது என்னை விஜி கோப்பைக்கு ஆடும் ஓர் ஆட்டக்காரராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். (இவரைப் பேட்டி கண்ட பிறகு, விஜி



கோப்பைக்காக நடந்த செமி பைனல் ஆட்டத்திலும் சிவராமகிருஷ்ணன் சதம் போட்டிருப்பது குறிப்பிடத்தக்கது) ஞாயிறன்று விடாமல் 'பிராக்டிஸ்' பண்ணுகிறேன். என் வரையில் கல்கத்தா சர்வகலாசாலையோடு ஆடிய 'மாட்சை'யே த்ரில்லிங் மாட்ச்' என்று சொல்லுவேன்.

**கிருஷ்ணசாமி கூறுகிறார்:**

நாங்கள் முப்பது நாட்கள் ஆந்திராவில் தங்கி கிரிக்கெட் பந்தயங்களில் ஆடினோம். எங்களுக்கு ஆந்திரா மெடிக்கல் கல்லூரியில் இடவசதி செய்து வைத்திருந்தார்கள். விசாகப்பட்டினத்தில் ஒவ்வொரு மாட்சுக்கும் எழுநூறு பேர் வந்து பார்த்து ரசித்து மகிழ்ந்தார்கள். (கிருஷ்ணசாமியின் அன்னை இச்சமயம் வந்து அவரது ஆட்ட ஆசையைப் பற்றிய சம்பவம் ஒன்றை நினைவு கூர்கிறார். ('சென்ற வருஷம் கிருஷ்ணசாமியின் ஒரே சகோதரிக்குக் கல்யாணம். அப்பொழுது கிருஷ்ணசாமி ரெய்ச்சூரில் விஜி கோப்பைப் பந்தயம் ஆடப் போய்விட்டான். அவனது சகோதரியின் கல்யாணத்துக்கு அவன் இல்லாதது எங்களுக்குப் பெருங் குறை!' இவ்வாறு தம் ஆதங்கத்தையும் கிருஷ்ணசாமியின் கிரிக்கெட் ஆசையையும் அவரது அன்னை அம்பலப்படுத்துகிறார்.) நான் வெங்கடராகவனின் சகோதரன் என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுகிறேன். நான் விவேகாநந்தா கல்லூரியில் பி.காம் மாணவன்! மைசூர் சர்வ கலாசாலைக் கெதிராக 172 ரன்கள் எடுத்தேன்.

**ஸ்டார் பாட்ஸ்மன் முகுந்தைப் பற்றிக் கிரிக்கெட் விமரிசகர் திரு பி என். சுந்தரேசனின் விளக்கம்:**

முகுந்த், மைசூர் டெஸ்ட் ஆட்டக்காரர் திரு ஜி. கஸ்தூரி ரங்கனின் சகோதரர் புதல்வர். இதுவரை மைசூர் ராஜ்ய கிரிக்கெட்டுக்குப் புகழ் ஈட்டியவர், தமிழகத்துக்கு வந்து கோயமுத்தூர் விவசாயக் கல்லூரியில் 'போஸ்ட் கிராஜுவேட்' பட்டம்பெறப் பயின்று வருகிறார். ஸ்பின் பௌலிங்கிலும் பாட்டிங்கிலும் மன்னர். பம்பாய்க்கு எதிராக இறுதி ஆட்டத்தில் கஸ்தூரி ரங்கய்யங்கார் குடும்ப வாரிசான முகுந்த் 137 ரன்கள் எடுத்து வெற்றிக்கு வழி வகுத்திருக்கிறார். விஜி கோப்பைப் பந்தயத்துக்குத் தென்னிந்தியப் பிரிவு காப்டன் இவரே.

**'பௌலிங் புலி' பார்க்கவ் மேதா பற்றி மானேஜர் ஜே. எஸ். ராவ்:**

சென்னை சர்வ கலாசாலை கோஷ்டிக்குப் பௌலிங் புலி பார்க்கவ் மேதா ஒரு பொக்கிஷம். பௌலிங் மன்னன் குப்தே அன்று டெஸ்டில் பதினைந்து விக்கெட்டுகள் வீழ்த்தி ரிக்கார்ட் கண்டது போல் பார்க்கவ் மேதா பம்பாய் சர்வ கலாசாலைக் கோஷ்டியின் பதினான்கு விக்கெட்டுகளையும் 113 ரன்களுக்குள் சுருட்டியது ஓர் அசுரசாதனை. இந்த ரோஹிண்டன் பாரியா கோப்பைப் பந்தயங்களில் மொத்தம் 34 விக்கெட்டுகளை எடுத்துச் சென்னை சர்வ கலாசாலைக் கோஷ்டிக்குப் பௌலிங்கினால் வெற்றி கிட்டப் பார்க்கவ் மேதா பாடுபட்டிருக்கிறார்.

சென்னை சர்வகலாசாலை யூனியன் விளையாட்டு மைதானம். துணைவேந்தர் திரு சுந்தர வடிவேலு வெற்றிபெற்ற கிரிக்கெட் இளைஞர்களுக்கு மாலையும் சர்டிபிகேட்டும் வழங்குகிறார். "சென்னை சர்வ கலாசாலை சரித்திரத்தில் இன்று பொன்னான நாள்!" என்று அவர் பூரிக்கிறார். காப்டன் ரவிச்சந்திரன் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கு விளையாட்டுச் சாதனங்கள் தேவைப் படுவதை நாசூக்காக வெளியிடுகிறார்.

**வாலிபால், டென்னிஸ், பூப்பந்தாட்டம், பெண்மணிகள் ஓட்டப் பந்தயம் ஆகியவற்றில் தமிழகம் அடைந்த வெள்ளிக் கோப்பை, ஷீல்டுகள் ஆகியவை இப்படிக் கூறலாம்:**

நாங்களும் அகில இந்தியப் போட்டிகளில் வெற்றி பெற்றுத்தான் தமிழகத்துக்கு வந்திருக்கிறோம். ஆனாலும் முப்பத்தாறு வருஷங்களாகக் கிடைக்காது, வாராது வந்த மாமணியைப் போல, இப்போது வந்திருக்கிற புதுத் தங்கக் கோப்பைக்கு இத்தனை அமர்க்களம் தேவைதான்!

— குண்டுமணி



அடுத்தாற்போல் துர்முகன் மிகக் கோபத்தோடு எழுந்தான். ''நம்மையெல்லாம் அவமதித்த அந்த வானரனை நாம் இனி விட முடியாது. நான் இந்தக் கணமே சென்று அந்த வானரச் சேனையை அடியோடு அழித்து விட்டுத் திரும்பி வருகிறேன்'' என்று கர்ஜித்தான்.

வஜ்ர தம்ஷ்டிரன் என்கிற சூரன் பயங்கரமான உலக்கையை எடுத்துக் கொண்டு நின்றான். ''இதோ இந்த உலக்கை, பகைவர்களுடைய ரத்தமும் மாமிசமும் கழுவாமல் பூசிக் கிடக்கிறது. குரங்கைப் பற்றி ஏன் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? அவர்களை நான் வதம் செய்து அந்த வானர சேனையையும் அழித்து விட்டுத் திரும்புகிறேன். என்னை அனுப்புவீராக!

''நான் ஒரு யோசனை சொல்லுகிறேன், கேட்பீர்களாக. சில ராட்சஸ சூரர்களை மானுட வேஷம் தரித்து, ராமனிடம் போகச் சொல்வோம். போய், 'பரதன் நம்மை உம்மிடம் அனுப்பினான். பெருஞ் சேனை பின்னால் வருகிறது' என்று சொல்லி ஏமாற்றி அவனையும் அவனுடைய சேனையையும் அஜாக்கிரதையாக இருக்கச் செய்து ராக்ஷச சேனை ஆகாய மார்க்கமாகச் சென்று அவர்கள் அனைவரையும் அக்கரையிலேயே வதம் செய்து விடலாம். இது என்னுடைய யோசனை'' என்றான்.

கும்பகர்ணனுடைய குமாரன் நிகும்பன் எழுந்து, ''நீங்கள் அனைவரும் இவ்விடமே அரசனுடன் இருங்கள். நான் போய் இந்தச் சத்துருக் கூட்டத்தைக் கொன்று விட்டுத் திரும்பி வந்து உங்களுக்குச் சமாசாரம் சொல்லுகிறேன்'' என்றான்.

இப்படி ஒருவர் பின் ஒருவராக எழுந்து ராவணனைத் திருப்தி செய்ய வீரம் பேசினார்கள். எல்லாரும் கூட்டமாக எழுந்து ஆயுதங்களைத் தூக்கிக் கர்ஜித்தார்கள்.

எல்லாரையும் உட்காரச் சொல்லி ராவணனுடைய தம்பி விபீஷணன் எழுந்து கைகூப்பிப் பேசலானான்.

''அண்ணா! இவர்கள் சொல்லும் யோசனைகள் காதுக்கு இனிமையாக இருந்தாலும் சரியானதல்ல. உமக்கு நன்மை தராது. நீதி சாஸ்திரத்துக்கு விரோதமாக ஒரு காரியம் செய்தால் அதனால் நஷ்டம் நேரிடும். சாம தான பேத உபாயங்களைப் பிரயோகிக்க முடியுமா என்று முதலில் பார்த்து அவை

# ராமாயணம்

## ராஜாஜி



முடியாவிட்டால்தான் தண்டோபாயத்தைப் பகைவன் பேரில் எடுத்துக் கொள்ள வேண்டும். இவர்கள் சொல்லுவது போல் உடனே யுத்தம் ஆரம்பித்து விட்டால் லங்கை நாசமாகும். நாமும் அழிந்து போவோம்.

''தருமத்தையும் யோசிக்க வேண்டும். ராமனுடைய மனைவியைத் தாங்கள் எடுத்து வந்தது கொஞ்சமும் நியாயமாகாது. மகா பாபமான காரியம். அந்தப் பாபத்தை முதலில் துடைத்துத் தீர்த்துக் கொள்ள வேண்டும். ராமன் நமக்கு என்ன தீங்கு செய்தான்? தண்டகாரண்யத்தில் ராமனால் செய்யப்பட்ட காரியங்க ளெல்லாம் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் ரட்சித்துக் கொள்ளத்தானே நடந்தன? அவனைக் கொல்ல வந்தவர்கள் பேரில் தான் அவன் யுத்தம் செய்து அவர்களைக் கொன்றான். அவன் மனைவியை அபகரித்து வர இவை எப்படிக் காரணமாகும்? அவன் மேல் நமக்குக் கோபமிருந்தால் அவனை நாம் எதிர்த்து யுத்தம் செய்திருக்க வேண்டும். அதை விட்டு விட்டு அவர்கள் இல்லாத சமயம் பார்த்து சீதையைத் தூக்கி வந்தது பாபமாகும்.

''நம் பேரில் குற்றமிருக்க நாம் முதலில் தண்டோபாயம் கையாளுவது சரியல்ல. ராமனுடைய பலத்தை நாம் சரியாகத் தெரிந்து கொள்ளவேண்டும். அவன் சேனை பலத்தையும் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஹனுமானுடைய பலத்தையும், சாமர்த்தியத்தையும் கண்டோம். அவனைப் பற்றி அலட்சியமாகப் பேசுவதில் பயனில்லை. அவன் செயலைக் கண்டு யாரே அதிசயப்படாதிருப்பர்? நம்முடைய பலம் பெரிதாயினும் எதிரியின் பலத்தோடு ஒத்துப் பார்த்தே யுத்தம் செய்யலாமா, அல்லது யுத்தமில்லாமல் தீர்த்துக்கொள்வது நலமா என்பதைத் தீர்மானிக்க வேண்டும். சீதையை முதலில் திருப்பித் தந்துவிட வேண்டியது அவசியம். இதுவே என்னுடைய யோசனை. லங்கையை ராமனும் வானரர்களும் தாக்குவதற்கு முன் சீதையைத் திருப்பித் தந்துவிடுவீர், அண்ணா! உமக்கு நான் ஹிதத்தைச் சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ள வேண்டாம். செய்த தவற்றை முதலில் திருத்திக் கொண்டு பிறகு மற்ற யோசனை செய்யலாம்'' என்று கைகூப்பி வணங்கி விபீஷணன் தன் தமையனை அரசனைப் பணிவுடன் வேண்டிக் கொண்டான்.

முதலில் தன்னுடைய மந்திரிகளும் சேனாதிபதிகளும் பேசிய வீரப் பேச்சுக்களைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்தபோதிலும் ராவணனுடைய மனத்தில் சந்தேகம் இருந்து கொண்டே யிருந்தது. எனவே விபீஷணன் பேசியதைக் கேட்ட பிறகு மறுநாள் திரும்பக் கூடி யோசிக்கலாம் என்று சபையை ஒத்திப்போட்டு அந்தப்புரம் சென்றான்.

## 79. மந்திராலோசனை

மறுநாட் காலையில் எழுந்ததும் விபீஷணன் அரசனிடம் போனான். தனக்குள் விஷயத்தை மறுபடியும் நன்றாக யோசித்து முடிவு செய்து கொண்டு சென்றான். அண்ணனுடைய நன்மையைக் கருதி அவனை எப்படியாவது திருத்திக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணிச் சென்றான்.

எப்போதும் போல் ராஜ மாளிகை எல்லா விதச் செல்வமும் லக்ஷணமும் பூஜைகளும் நிறைந்து விளங்கிற்று. ஆயுதங்களும் கவசங்களும் பூண்ட வீரர்கள், ஆபரணங்கள் பூண்ட பணிவிடை ஸ்திரீகள் எங்கே பார்த்தாலும் நின்றார்கள். பிராமணர்கள் வேத கோஷம் செய்து கொண்டிருந்தார்கள். வாத்தியக்காரர்கள் சுப்ரபாதம் வாசித்துக்கொண்டிருந்தார்கள். இப்படி மங்கள நாதம் நிறைந்த ராக்ஷஸ வேந்தனுடைய அரண்மனைக்குள் விபீஷணன் மிக்கக் கவலையுடன் பிரவேசித்தான்.

அரசன் முன் கைகூப்பிய வண்ணம் நின்றான். முக்கிய மந்திரிகளைத் தவிர மற்றவர்களை வெளியே போகச் சொல்லி ராவணன் தன் தம்பியைப் பேசச் சொன்னான்.

''அண்ணனே! நான் சொல்லுவதில் பிசகு இருந்தால் மன்னிக்க வேண்டும். என்னுடைய லாபத்துக்காக நான் ஏதும் பேசவில்லை. உம்முடைய நன்மை ஒன்றையே கருதிப் பேசுகிறேன். நான் சொல்லுவதைக் கேட்டு ஆலோசித்துக் காரியங்களைச் செய்யக் கோருகிறேன்'' என்று ஆரம்பித்தான். (தொடரும்)



''இரவு ஒன்பது மணிக்குப் புது மனை புகுவிழா நடத்தப் போகிறோம். அவசியம் வந்து நடத்தி வைக்கணும்!''


சீங்கக் 5 கழுகு
பீட்டர் ஓ டான்னல்
எனக்குப் பொறுமையில்லை; உன் காதலைப் பெற முடியாதோ என்ற ஏக்கம்தான்.
மாக்ஸ்! கார்லினுடன் நான் டெலிபோனில் பேசுவது உனக்குப் பொறுமையாயிருந்தால் அவனை இங்கேயே வரச்சொல்கிறேன். சிறிது காலம் வென்னிஸ்ஸில் அவன் தங்கட்டும்.

வேண்டாம். ஆங்கிலேயன் என்றாலே எனக்கு அலர்ஜி. லண்டனிலேயே இருக்கட்டும் அவன்...
கார்லின் உனக்கு உற்ற தோழனாய் விளங்குவான்.

...இதோ அல்போரினி பிரபுவின் அரண்மனை வந்துவிட்டது.
1713

அல்போரினி அரண்மனையில் விருந்தும் நடனமும் அமர்க்களப்படுகின்றன.
அல்போரினி சரித்திர நாட்களில் வாழவேண்டியவன்; காலந்தப்பிப் பிறந்து விட்டான் என்று நான் சொன்னது சரியா?
ரொம்ப சரி!

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது பளபளப்பு; அடிமட்டத்தில் அழுக்கு!
ஒரே நிமிஷத்தில் சூழ்நிலையைக் கச்சிதமாகப் புரிந்து கொண்டு விட்டாயே!
1714


அல்போரினி பிரபு தன் விருந்தினரிடையே வளைய வருகிறன்.
மாடஸ்டி! உன்னேயும் மாக்ஸ் அழைத்து வந்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம். விருந்து உனக்குப் பிடித்திருக்கிறதா?


பேஷா இருக்கிறது. ஏதோ சரித்திர காலத்துக்கே போய்விட்டதுபோல் ஒரு பிரமை ஏற்படுகிறது.
நிஜமாகவே அப்படி நடந்தாலும் நல்லது தான். நவீன உலகம் எனக்குப் பிடிக்காத ஒன்று.



உன்னிடமிருந்து மாக்ஸைச் சற்று நேரம் பிரிக்கப் போகிறேன். வியாபார விஷயமாக இவனிடம் அவசரமாகப் பேசவேண்டியிருக்கிறது.
தாராளமாக அழைத்துப் போங்கள்.
1715


இரவு நீண்ட நேரத்துக்குப் பிறகு அல்போரினி அரண்மனையில் விருந்து முடிகிறது.
உன் நண்பன் அல்போரினி பிரபு தன்னை யாரோ கத்தியால் குத்திக் குடைவதுபோல் முகத்தை வைத்துக்கொண்டிருக்கிறானே!


அந்த வேதனையை அவனுக்கு அளிப்பவள் நான்தான்.



சிங்கக் கழுகு பற்றிய ரகசியத்தை அவன் தெரிந்துகொண்டுவிட்டான். அதை அவன் காட்டிக்கொள்ளவில்லை தான். ஆயினும் அந்த ரகசியம் அவனுக்குத் தெரியாமலா சிங்கக் கழுகை விலைக்கு வாங்கிக்கொள்வதாகக் கூறினன்?
1716

மாக்ஸ்! சிங்கக் கழுகு பற்றி அல்போரினி என்ன தெரிந்து கொண்டிருக்கிறன்?

ரகசியத்தை என்னிடமிருந்து துருவிக் கேட்டு அறிய முயலாதே! உன்னை ஆச்சரியத்தில் ஆழ்த்த ஆசைப் படுகிறேன்.

சரி, ஆனால் இன்றிரவு அவன் சிங்கக் கழுகை விலைக்கு வாங்கிக் கொள்வதாய்ச் சொன்னான்; நீ விற்கமறுத்து விட்டாய், இல்லையா?

கோடிக்கணக்கில் பணம் கொடுத்தாலும் விற்கமாட்டேன். மேலும் அது எனக்குச் சொந்த மில்லையே. இன்னொருவன் வாங்க நான் உதவி யிருக்கிறேன், அவ்வளவு தான்.

ஹலோ! யார்? அல்போரினி பிரபுவா? இப்போதானே உங்க ளிடம் விடைபெற்றுக்கொண்டு வந்தேன்? எதையாவது மறந்து போய் அங்கு வைத்துவிட்டேனு?

1717

ஃபோனில் அல்போரினி பிரபு கூறுகிறன்:

மாக்ஸ்! உன்னைத் தொந்தரவு செய்கிறேன். ஆனாலும் தாமத மின்றி உன்னுடன் ஒரு விஷயம் பேச வேண்டும் எனக்கு.

என்ன, சிங்கக் கழுகு பற்றியா?...

...அதைப் பற்றித்தான் நாம் ஏற்கெனவே விவாதித்தாகி விட்டதே!

இது வேறு விஷயம். டான்ஸோ நீவை நான் விற்றே னல்லவா?...

...அந்த விற்பனைப் பத்திரம் சட்டப்படி செல்லாது என்று தோன்றுகிறது!

அப்படிச் சொல்லி விட்டால் ஒப்புக்கொள்ள முடியுமா? பத்து நிமிஷங் களில் நேரில் வந்து சந்திக்கிறேன்.

(தொடரும்)



"பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்...!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை ஒளிவிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாயநாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**நவீன பல் பராமரிப்பு முறைகளே சிக்கனமாக இருக்கும்போது பழைமையான பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!**

உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!

...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் பிரஷ் உபயோகியுங்கள்.





## 29. நெருக்கடி

சட்டசபைக்குள் அங்கத்தினர்கள் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். சபாநாயகரால் அடக்க முடியவில்லை. பேசுவதற்காக எழுந்து நின்று கொண்டிருந்த ஓர் எதிர்க்கட்சி அங்கத்தினரைப் பேசவிடாமல் ஆளும் கட்சியின் அங்கத்தினர்கள் கூச்சல் போட்டுத் தடுத்துக் கொண்டிருந்தார்கள். எதிர்க்கட்சி அங்கத்தினரோ பிடிவாதமாக நின்று கொண்டிருந்தார்.

''நீதியையும் உண்மையையும் கூச்சல் போட்டு மறைத்துவிட அனுமதிக்கமாட்டோம். சிவராமனின் மரணம் பற்றி ஆராய ஒரு குழுவை அரசாங்கம் நியமிக்க வேண்டும்'' என்றார் அவர்.




''குழு நியமிக்க வேண்டிய தேவை இல்லை. சிவராமனின் சட்டைப் பையில் அவரே தாம் தற்கொலை செய்து கொள்வதாக எழுதி வைத்திருந்த கடிதம் இருந்தது. இது தற்கொலையே தவிர வேறல்ல'' என்றார் போலீஸ் மந்திரி.

''இறந்தவருடைய பைக்குள்ளிருந்த கடிதம், அவர் எழுதியதுதான் என்பதைக் கனம் மந்திரி அவர்கள் நிச்சயப் படுத்திக் கொண்டாரா?'' என்று கேட்டார் எதிர்க்கட்சி அங்கத்தினர்.

''அது பற்றிய விவரம் வரவில்லை. வந்தபின் சபைக்குத் தெரிவிக்கிறேன்.''

''இறந்தவரின் பைக்குள்ளிருந்த கடிதம் அவரால் எழுதப்பட்டதில்லை; அது அவருடைய கையெழுத்தில்லை என்று 'பாரதமணி' ஆசிரியர் எழுதியிருக்கிறாரே!''

'''பாரதமணி' ஆசிரியர் இதில் தலையிட்டுக் குழப்ப வேண்டிய அவசியமில்லை'' என்று கோபத்தோடு சொன்னார் மந்திரி.

''அரசாங்கம் செய்யத் தவறியதைப் 'பாரதமணி' ஆசிரியர் செய்திருக்கிறார். சிவராமன் ஆசிரியரின் நண்பர். நண்பருடைய கையெழுத்தை ஆசிரியர் நன்கு அறிந்தவர்.''

''போலீஸ் அதிகாரிகள் விசாரணைப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகு, மற்றவர்கள் இதில் தலையிட்டுக் குழப்ப வேண்டியதில்லை.''

''போலீஸ் அதிகாரிகள் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யாத போது மக்கள்தாம் பொறுப்பேற்க வேண்டும்.''

''இறந்தவரின் உடலைக் கைப்பற்றிச் சோதனை போட்டாகி விட்டது. போலீஸார் சார்பில் பிரேதப் பரிசோதனை நடத்திய டாக்டர் தற்கொலை என்ற முடிவை உறுதிப் படுத்தி யிருக்கிறார்.''

''தலையில் அடிபட்டதால் மரணம் என்ற அளவுக்குத்தான் டாக்டர் முடிவுக்கு வந்திருக்க முடியும். மாடியிலிருந்து தலைகுப்புற விழுந்ததால் அப்படி அடிபட்டதா அல்லது யாராவது தலையில் பலமாக அடித்தார்களா என்பதைப் பற்றி டாக்டர் அபிப்பிராயம் ஏதும் கூறியதாகத் தெரியவில்லை. சிவராமனின் சட்டைப் பையில் தற்கொலை செய்து கொள்வதாய்க் கடிதம் இருந்ததால் டாக்டரும் அதையொட்டித் தம் முடிவைக் கூறிவிட்டிருக்கலாம். அது பொய்க் கடிதம் என்பதைச் சுட்டிக்காட்டினால் டாக்டர் தம் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளக்கூடும்.'' இவ்வாறு ஓர் அங்கத்தினர் கூற, மற்ற எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், ''கேவலம்.... கேவலம்....'' என்று கூச்சலிட்டார்கள்.

''மரணம் பற்றி விசாரணை நடத்த ஒரு குழு அமைத்தே தீர வேண்டும். இல்லையென்றால் உண்ணாவிரதம் இருப்பேன்'' என்றார் எதிர்க்கட்சி அங்கத்தினர், மிகுந்த கோபத்துடன்.

''இந்தப் பிரச்னைக்குக் காரணமே 'பாரதமணி'ப் பத்திரிகைதான். முதலில் அந்தப் பத்திரிகையைத் தடை செய்து

அதன் ஆசிரியரைக் கைது செய்யவேண்டும்'' என்றார், ஒரு மார்க்ஸியவாதி.

''இதென்ன ருஷ்யாவோ சீனுவோ என்று நினைத்தீர்களா? இங்கு எழுத்துச் சுதந்திரம் உண்டு'' என்று கூச்சலிட்டார் இன்னொர் எதிர்க்கட்சி அங்கத்தினர்.

சட்டசபைக்குள் கூச்சல் அளவுமீறி விட்டது. சபாநாயகரால் அடக்கமுடியாமற் போகவே, சபையை மறுநாளைக்கு ஒத்தி வைத்துவிட்டுச் சபையை விட்டு வெளியேறினர்.

இவ்வளவு சலசலப்புக்கும் காரணம் முரளிதான்.

சிவராமன் இறந்து கிடந்த இடத்துக்குச் சென்று பார்த்தபோது முரளிக்குச் சந்தேகம் தோன்றியது. கீழே குப்புறக் கிடந்த சிவராமனை உற்றுக் கவனித்தான். சிவராமனின் தலையில் மட்டும் பலத்த காயம் இருந்தது. அதிலிருந்து இரத்தம் பெருகி வந்து கொண்டிருந்தது. உடலில் வேறு காயமே இல்லை. யாரோ தலையில் அடித்துக் கொன்றுவிட்டு உடலை அங்கே போட்டிருக்கலாம்தானே என்று தோன்றியது. சிவராமனின் சட்டைப் பையில் இருந்த கடிதம் அவன் எழுதியது போலவே இருந்தாலும் அது திறம்படச் செய்யப்பட்ட 'ஃபோர்ஜரி' என்றுதான் முரளிக்குத் தோன்றியது. சிவராமன் மாடியிலிருந்து தலைகுப்புற விழுந்து தற்கொலை செய்து கொண்டதாக நினைத்துக் கொள்ளட்டும் என்று கொலை செய்தவர்கள் எண்ணியிருக்கலாம்......

அன்று மாலையே கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்கள், நல்லதம்பியின் தலைமையில் ஒரு மௌன ஊர்வலம் நடத்திச் சிவராமனின் உடலை மயானத்தில் எரித்துவிட்டார்கள்.

மறு நாள் 'பாரதமணி'ப் பத்திரிகையின் தலையங்கத்தில் முரளி தன்னுடைய சந்தேகத்தை வெளியிட்டிருந்தான். அவனுடைய தலையங்கத்தின் விளைவுகள் தாம் அன்றைய சட்டசபையில் ஏற்பட்ட கூச்சலும் சண்டையும்.



முரளி, மிகுந்த சோர்வுடன் சிவராமனின் வீட்டுக்குச் சென்றான். பட்டம்மாள் ஒரு பாயில் சுருண்டு படுத்திருந்தாள். பத்து நாட்களில் உருக்குலைந்து விட்டாள். அவளுக்கு ஏற்பட்டுவிட்ட அதிர்ச்சியையும் துயரத்தையும் எண்ணி முரளி மறுகினான். யாருடைய தேற்றுதலும் அவள் மனத்தைச் சாந்தப்படுத்தவில்லை. மகன் மரணமடைந்த செய்தியைக் கேட்டபோது ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து அவள் இன்னும் மீளவில்லை. பைத்தியக்காரியைப் போல் பரக்கப் பரக்க விழித்தாள். எந்தப் பேச்சும், காட்சியும் அவளுடைய அறிவில் பதிவதாகவே தெரியவில்லை. எங்கோ சூன்யத்தில் அவளுடைய சிந்தனையும், பார்வையும் அலைவதாகத் தோன்றியது.

சிவராமன் இறந்த அன்று, சாரதா தான் அந்தச் செய்தியைச் சொல்ல, பட்டம்மாளிடம் ஓடோடியும் வந்தாள். அப்போது துடிதுடித்து அலறி அழுதவள் சாரதாதானே தவிர, பட்டம்மாளுக்கு ஒரு சொட்டுக் கண்ணீர்கூட வரவில்லை. செய்தி கேட்டதும் பிரமை பிடித்தவளைப் போல் விழித்தபடியே நின்றாள். யாருடனும் பேசவில்லை. மத்தியானம் கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்கள் சிவராமனின் உடலை அந்த வீட்டுக்குள் கொண்டு வந்து கிடத்தியபோது பட்டம்மாள், மகனைக் குனிந்து பார்த்தாள். 'கோ'வெனக் கதறி அழுதாள்.

அவளைத் தினமும் சாரதாதான் கவனித்து வந்தாள். அவளைத் தன்னுடைய வீட்டுக்கு அழைத்தாள், சாரதா. ஆனால் பட்டம்மாள், அந்த வீட்டை விட்டு வெளியே வரவே மறுத்து விட்டாள். முரளியும் தினமும் அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வந்தான். அவனுடைய பாசமும், பரிவும் தாம் பட்டம்மாளுக்குச் சற்று ஆறுதலாயிருந்தன.

''நான் செத்துப் போனால் எனக்கு நீ கொள்ளி வைப்பாயா? அவனை நம்பினேன். இப்படி நடுத் தெருவில் நிறுத்தி விட்டுப் போய் விட்டான்'' என்று முரளியின் கையைப் பிடித்துக்கொண்டு பட்டம்மாள் கேட்டபோது முரளியின் கண்களில் நீர் பெருகிவிட்டது. அவளுடைய கைகள் இரண்டையும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

''நீங்கள் இப்படித் தனியாக இங்கே இருப்பானேன்? நான் தனியாகத்தானே இருக்கிறேன். என்னோடு வந்து இருக்கப்படாதா? நானும் உங்களுக்கு ஒரு மகன்தானே?'' என்றான் முரளி.

பட்டம்மாள் அவன் தலையைத் தடவிக் கொடுத்தாள். நீண்ட பெருமூச்சு விட்டாள். அவளுக்கு ஏனோ அந்த வீட்டை விட்டுப் போக மனமே இல்லை.

''இங்கேயே இருந்து விடுகிறேன். நீயும், அந்தப் பெண்ணும் அடிக்கடி வந்து என்னைக் கவனித்துக் கொள்ளும்போது எனக்கு இங்கே என்ன பயம்?'' என்று கூறி மறுத்து விட்டாள்.

சிவராமனின் வீட்டிலிருந்து புறப்பட்டுப் பேராசிரியரின் வீட்டை முரளி அடைந்த போது பேராசிரியர் கமலசாமி, வராந்தாவில் சோபாவில் சாய்ந்தவாறு சுருட்டை ஊதிக் கொண்டிருந்தார். அவர்களிடையே பேச்சு இயல்பாகச் சிவராமனின் மரணம் பற்றியே இருந்தது.

''இது ஒரு கொலைதான் என்பதை எப்படியாவது நிரூபித்தே ஆக வேண்டும். சட்டசபை அங்கத்தினர்கள் இது விஷயத்தில் அக்கறை கொண்டிருக்கிறார்கள். இதற்கு ஒரு முடிவு காணும் வரை நானும் ஓயமாட்டேன்'' என்றான் முரளி, ஆவேசத்துடன்.




''ஏதோ நடந்தது நடந்துவிட்டது. இனி மறந்துவிட வேண்டியதுதானே. இது பற்றி நீ ஏன் வீணாக அலட்டிக் கொள்கிறாய்?'' என்றார் பேராசிரியர் கமலசாமி. ''போன உயிர் திரும்பியா வரப் போகிறது?''

இதைக் கேட்டு முரளி திகைத்தான். கமலசாமியை உற்றுப் பார்த்தான். அவர் அமைதியாகச் சுருட்டை ரசித்துக் கொண்டிருந்தார். சிவராமனின் மரணம் பற்றி அவர் கவலைப்படுவதாகவே தெரியவில்லை !

''அவன் என்னுடைய நண்பன், சார்!'' என்றான் முரளி, அழுத்தமாக.

''ஆல்ரைட்.. ஆல்ரைட்... அவனே போய் விட்டான்.... முரளி, எப்போது அவன் அந்தக் கட்சியில் சேர்ந்து விட்டானோ, அப்போதே இதையெல்லாம் எதிர்பார்க்க வேண்டியது

தான்....'' என்றார் பேராசிரியர் கமலசாமி அலட்சியமாக.

முரளி வியப்போடு அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'' உங்களுக்கு மருமகனாக வந்திருக்க வேண்டியவன்'' என்றான் முரளி.

''எஸ்.... எஸ்.... நல்ல வேளை.... அந்தச் சிக்கலிலிருந்து விடுபட்டுவிட்டேன். நௌ தி ப்ராப்ளம் ஈஸ் ஓவர்..'' என்று கூறிவிட்டு மன நிறைவோடு நீண்ட பெருமூச்சு விட்டார். முரளியை உற்றுப் பார்த்தார்.

முரளிக்கு உள்ளூறக் கோபம் எழுந்தது. ஒருவனுடைய மரணத்தைப் பற்றி இவர் எவ்வளவு அலட்சியமாகப் பேசிவிட்டார் !

''ஆனால் பிரச்னை முழுவதும் தீர்ந்தபாடில்லையே. உங்களுக்குப் புதுப் பிரச்னை எழுந்திருக்கிறது'' என்றான் முரளி, அவரைக் கூர்ந்து பார்த்தபடியே.

''என்ன?'' என்று வியப்புடன் கேட்டவாறு புருவங்களை உயர்த்தி அவனைப் பார்த்தார்.

''சாரதாவைப் பற்றிய பிரச்னைதான்.''

''ஓ....! தட்ஸ் ஆல் ரைட்.... கொஞ்ச நாட்கள் பேயறைந்த மாதிரிதான் இருந்தாள். இப்போது கொஞ்சம் கொஞ்சமாய்ச் சரியாகி வருகிறாள். பழைய கனவாக எண்ணி மறக்க வேண்டியதுதானே. மாடியில் இருக்கிறாள். போய்ப் பாரேன்'' என்றார் கமலசாமி உற்சாகத்துடன்.

'' எனக்கு இப்போது வேறு வேலை இருக்கிறது சார். இன்னொரு முறை பார்க்கிறேன்'' என்று கூறிவிட்டு அவசரமாக எழுந்தான் முரளி.

பேராசிரியர் திகைப்புடன் அவனைப் பார்த்தார். அவருடைய முகத்தில் ஏமாற்றத்தின் சாயல் படர்ந்தது. அதைக் கவனியாமலே முரளி, காரில் ஏறிச் சென்று விட்டான்.

பேராசிரியர் மீது அவனுக்குக் கோபம் எழுந்தது. கோபத்தையெல்லாம் கார் மீது காட்டவே, கார், சீறிப் பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது. அவனுடைய சிந்தனை கடும் வேகத்தில் சுழன்று கொண்டிருந்தது. கடைசியில் கமலசாமி மீது அவனுக்குப் பச்சாத்தாபந்தான் தோன்றியது.

பாவம்! அவருடைய ஆசை அது. பழைய கனவுகளை அவர் நனவாக்க விரும்புவதில் என்ன தப்பு?...

முரளி வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது மிகவும் களைப்புற்றிருந்தான். ஆயாசம் தீரக் குளிர்ந்த நீரில் குளித்தான். குழாய்த் தண்ணீரைத் திறந்துவிட்டுக் கொண்டு அதனடியில் அமர்ந்தபோது, தண்ணீரின் குளிர்ச்சியில் உடலின் அசதி மறைவது போலிருந்தது. ஆனால் மனம் மட்டும் ஓயாமல் சிந்தனையிலேயே மூழ்கிவிட்டது. அதை எப்படிக் குளிர வைத்து ஆயாசத்தைத் தீர்ப்பது? அதை அதன் போக்கில் ஓட விட்டுவிட்டுக் குழாய்த் தண்ணீருக்கடியில் அமர்ந்திருந்தான்.

சாரதாவின் சோகம் நிறைந்த முகம் அவனுடைய நினைவில் வட்டமிட்டுக் கொண்டேயிருந்தது.

சிவராமன் மீது அவள் கொண்ட பிரேமையும் அவனுக்காகவே கம்யூனிஸ்ட் கட்சியில் அவள் சேர்ந்த நிகழ்ச்சியும் முரளியின் நினைவில் வந்தபோது, அவனுக்காகப் பரிதாபப்பட்டான்.

சிவராமனோடு ஹாஸ்டலில் வாழ்ந்த வாழ்க்கையையும் அவனோடு தர்க்கம் செய்து கழித்த நாட்களையும் எண்ணியபோது முரளியின் கண்களில் நீர் நிறைந்துவிட்டது. துணிவுக்கு இலக்கணமாக அமைந்த சிவராமனின் பரிதாபமான முடிவை எண்ணியபோது விம்மி விம்மி அழுதான். குழாய்த் தண்ணீருக்கடியில் இருந்தவாறே அவன் வடித்த கண்ணீர் குழாய்த் தண்ணீரோடு கலந்தது.

மறுநாள் காலையில் முரளி 'பாரத மணி' காரியாலயத்துக்கு வந்தபோது சாமிநாதன் பரபரப்புடன் முரளியிடம் ஓடி வந்தான்.

''கோவிந்தராம் கம்பெனியிலிருந்து வக்கீல் நோட்டீஸ் வந்திருக்கிறது'' என்றான்.

''ஏன்?''—துணுக்குற்றுக் கேட்டான் முரளி.

''பிரிண்டிங் இங்க் வாங்கியதற்குள்ள பாக்கிக்குத்தான் நோட்டீஸ். ஒரு வாரத்துக்குள் பணம் கொடுக்காவிட்டால் நடவடிக்கை எடுக்கப்படுமாம்.''

''எவ்வளவு கட்ட வேண்டும்?''

''மூவாயிரம்.''

''ஐயாயிரம் பாக்கி வைத்திருந்தபோதே நம்மை நம்பினார்களே, இப்போ என்ன வந்து விட்டது?''

''அந்தக் கம்பெனி மானேஜரை இரு தினங்களுக்கு முன் ஆதிமூலம் போய்ப் பார்த்தாராம். அவர்தான் தூண்டியிருக்க வேண்டும். மானேஜருக்கு லஞ்சம் ஏதாவது கொடுத்திருப்பார். அந்தக் கம்பெனி ஹெட் கிளார்க் அப்படித்தான் என்னிடம் சொன்னார்'' என்றான் சாமிநாதன்.

முரளிக்கு ஒன்றும் ஓடவில்லை. இப்படி ஒரு சதித் திட்டம் உருவாகும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. முர

# மனங்கவரும் நறுமணத்தை அனுபவிக்கவும், குளிக்கும்போது ஏற்படும் இன்ப உணர்ச்சியைப் பெறவும்

# மலபார் க்ளோரி சோப்

## இப்போது வழங்குகிறது டாடா



மலபார் க்ளோரி சோப் ஓர் இணையற்ற சிறந்த சோப் என்பதை அது வீசும் மனங் கவரும் நறுமணத்திலிருந்தே உணர்வீர்கள். இந்த சோப்பை உபயோகிப்பதால் குளிப்பதே ஆனந்தத்தைக் கொடுக்கிறது. உங்கள் சருமத்தை சிறப்பாகப் பராமரிப்பதற்கென்றே மலபார் க்ளோரி சோப் தனிப்பட்ட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. நீங்களும் மலபார் க்ளோரி சோப்பை வாங்கமுடியும்.

டாடா தயாரிப்பு

Bensons/4300 TM

## "பொழுதே எப்படிப் போனாய்?"




முன்னீர்ப்பள்ளத்தில் 'அன்பகம்' கண்டவர் தமிழ்ப் பெரும் புலவர் திரு ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்கள். இவர்க்கும் திரு டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கட்கும் நட்பு நெருக்கமாக உண்டு. பிள்ளையவர்கட்கு முதலியாரவர்கள் இருபத்திரண்டு ஆண்டுகட்கு இளையவர். இருந்தும் தமிழுணர்ச்சிதான் நட்பாம் கிழமை வழங்கியது. முதலியாரவர்கள் வரவில்லையெனில் பிள்ளையவர்கட்கும் பொழுது போகாது: மிகவும் சிரமப்படுவார். அப்படி வருந்திய வேளையிலே, ஒரு முறை பொழுதை முன்னிலைப்படுத்திச் சொன்னார் இப்படி:

'மேதிபோல் மாசுணம்போல் மெல்லத் தவழ்ந்துநீ
போதி!'யென் றாலும்போ காய்பொழுதே — ஓதியுயர்
நாதன் சிதம்பரனும் நானுமுரை யாடுகையில்
காதமேன் சென்றாய் கடிது?'

"'எருமை போலும், பெரும் பாம்பு போலும் மெல்ல மெல்ல நகர்ந்தோ ஊர்ந்தோ சென்றுவிடு', என்று முறையிட்டாலும் போகமாட்டேன் என்று சண்டித்தனம் செய்கின்ற பொழுதே! கற்றுயர்ந்த என் நாதன் சிதம்பரனும் நானும் உரையாடிக் கொண்டிருந்தால் விரைவாகக் காதம் தொலைவு ஓடிச் சென்றுவிடுவதும் ஏனோ?"

— வி. ஜி. சீனிவாசன்.

ளிக்கு உள்ளூறக் கோபம் கொந்தளித்தது.

"மேற்கொண்டு இங்க் தரவும் அவர்கள் மறுத்துவிட்டார்கள்" என்றான் சாமிநாதன்.

"இந்த ஊரில் இந்த ஒரு கம்பெனிதானா இங்க் வியாபாரம் செய்கிறது? வேறு கம்பெனியிடம் வாங்க வேண்டியதுதானே?" என்று எரிந்து விழுந்தான் முரளி.

"வேறு நான்கு கம்பெனிகள் உண்டு. அவர்களிடமும் நமக்கு இங்க் கொடுக்க வேண்டாம் என்று ஆதிமூலம் சொல்லியிருப்பார் என்று நினைக்கிறேன்."

"அவர்களுக்குக் கட்டளை இட இவர் யார்?"

"ஏற்கனவே ஒரு கம்பெனிக்கு மூவாயிரம் பாக்கி யிருப்பதாகச் சொல்லியிருப்பார். அதனால் மற்றக் கம்பெனிக்காரர்கள் முன்பணம் ஆயிரம் ரூபாய் கேட்கிறார்கள். நம்மிடம் இன்னும் பத்து நாட்களுக்குப் போதுமான இங்க் தான் இருக்கிறது."

"சேச்சே... நோட்டீஸ் வரும் அளவுக்கா 'பாரதமணி' கேவலமாகி விட்டது? மோசக்காரர்கள்" என்று கோபத்துடன் கூறிக் கொண்டே முரளி அவசர அவசரமாக பாங்க் புத்தகத்தை எடுத்துப் பார்த்தான். நல்ல சுற்றியது. மனக் குழப்பத்துடன் சாமிநாதனைப் பரிதாபமாகப் பார்த்தான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாக எழுந்து வேகமாக அறையை விட்டு வெளியேறினான்.

பத்திரிகை அச்சாவதற்காக வாங்கி வைத்திருந்த 'நியூஸ் பிரிண்ட்' தாளை ஒரு பாங்கில் அடகு வைத்து ஆறாயிரம் ரூபாய் பெற்றான். பணத்தைப் பெற்றுக்கொண்டு முரளி திரும்பியபோது இரண்டு மணியாகி விட்டது. பசியினால் முகம் வாடிப் போய்க் காரியாலயத்துக்குள் நுழைந்தான். கையிலிருந்த ரூபாய் நோட்டுக்களைச் சாமிநாதனின் மேஜை மீது போட்டான்.

"அந்தக் கோவிந்தராம் கம்பெனிக்குக் கொடுக்க வேண்டிய பாக்கியைக் கொடுத்துவிடு. இனி, அங்கே இங்க் வாங்க வேண்டாம். வேறு கம்பெனியில் முன்பணம் கட்டி வாங்கு" என்றான்.

சாமிநாதன் பணத்தை எண்ணினான். நாலாயிரம் இருந்தது. வியப்புடன் முரளியை நிமிர்ந்து பார்த்தான்.

"சார்! இந்தப் பணம்...?"

"நியூஸ் பிரிண்டை பாங்கில் வைத்து வாங்கியிருக்கிறேன்" என்றான் முரளி.

"ஐயோ, நமக்கு அச்சடிக்க...?"— பதறினான் சாமிநாதன்.

"பயப்படாதே. எல்லாப் பேப்பரையும் வைத்துவிடவில்லை. பாதியைத்தான். இன்னொரு பாதி மூன்று மாதங்களுக்கு நமக்குப் போதுமே? அதற்குப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்போதைய பிரச்னை தீர்ந்ததல்லவா?" என்றான் முரளி, நிம்மதியுடன்.

"இல்லையே சார்...! இன்றைய தபாலில் இந்தக் கட்டடத்தின் சொந்தக்காரர் நோட்டீஸ் விட்டிருக்கிறார்.. மூன்று மாத வாடகை பாக்கி. ஆயிரத்து இருநூறு ரூபாயை ஒரு வாரத்தில் கொடுக்காவிட்டால் நடவடிக்கை எடுப்பாராம்" என்றான் சாமிநாதன்.

சோர்ந்து போயிருந்த முரளிக்கு இந்தச் செய்தி கோபத்தைக் கிளறியது.

"எல்லாருமாகச் சேர்ந்து என்னை ஒழித்து விடவே நினைத்து விட்டார்களா?... எமனே வந்து குறுக்கிட்டாலும் சரிதான். 'பாரதமணி'யை நான் நடத்தியே தீருவேன். ஆயிரத்து இருநூறுதானே வேண்டும்? அவன் மூஞ்சி

யிலே விட்டு எறி'' என்று கூறிக் கொண்டே சட்டைப் பையிலிருந்த இரண்டாயிரம் ரூபாயை எடுத்து மேஜையின்மீது வீசி எறிந்து விட்டு, தன் அறைக்குப் போய்விட்டான்.

சாமிநாதன் திகைத்துப் போய் மேஜை மீது சிதறிக் கிடந்த ரூபாய் நோட்டுக்களை வெறிக்கப் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் ஓடவில்லை. முரளி யின் மனக் குழப்பத்தை அவனுல் புரிந்து கொள்ள முடிந்தது. இந்தச் சமயத்தில் முரளியிடம் மற்றப் பாக்கி களைப் பற்றி எப்படிச் சொல்வது என்று தெரியாமல் விழித்தான்.

டெலிபோன் பில்லுக்காக எண் ணூற்று முப்பது ரூபாய் கட்ட வேண் டும். மின்சார பில்லுக்கு முந்நூற்று நாற்பது ரூபாய் பாக்கி. இன்னும் பல கடைகளுக்குச் சிறு சிறு தொகைகள் பாக்கி இருந்தன. இன்னும் பத்து நாட்களில் டெலிபோனுக்கும், கரண் டுக்கும் பணம் கட்டவில்லை யென்ருல் டெலிபோன் தொடர்பும் மின்சாரத் தொடர்பும் அற்றுவிடும். மின்சாரம் இல்லை யென்ருல் அச்சு இயந்திரம் இயங்காது.

சாமிநாதன், சற்று நேரம் திகைத் துப்போய் உட்கார்ந்திருந்தான். பிறகு எல்லா பில்களையும் அன்று வந்த மற்றக் கடிதங்களுக்கு இடையே வைத்து முரளியின் மேஜை மீது வைத்துவிட்டு வந்தான்.

கடிதங்களை ஒவ்வொன்ருகப் பார்த்த முரளி, இடையே இருந்த பில்களைக் கவனித்தபோது வெறுப்புடன் அவற்றை உற்றுப் பார்த்தான். வயிற் றில் ஒருவித சங்கடமான உணர்ச்சி எழும் பியது. அது நிச்சயமாகப் பசியினுல் அல்ல. பசி மந்தித்து வெகு நேரமாகி விட்டது. இது அதையும் மீறிய வேதனை உணர்வுதான். சற்று நேரம் நெற்றியைக் கையினுல் தாங்கியபடியே உட்கார்ந்திருந்தான். அடிமேல் அடி விழுவதை நினைத்து மலைத்தான். பிரச்னை ஓர் அளவைக் கடந்துவிட்ட நிலையில் கவலையை உதறிவிட்டுச் சிரித் தான். நல்ல வேளை. அந்தச் சமயத் தில் சாமிநாதன் அங்கு இல்லை. இருந் திருந்தால் முரளி தனிமையில் இருந்து சிரிப்பதைப் பார்த்து அவனுக்குப் பைத் தியம் பிடித்து விட்டது என்றுதான் நினைத்திருப்பான்.

'முரளி, அயர்ந்து விடாதே. இனி தான் பொறுமையாக இருக்க வேண் டும். இதெல்லாம் அற்பமான விஷ யங்கள்....' என்று தனக்குள்ளேயே முனகிக் கொண்டான்.

திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவ ஞக எழுந்தான். விரைந்து சாமிநாத னின் அறைக்குள் வந்து ''இன்னும் எவ்வளவு பணம் வேண்டும்? உன் னுடைய சம்பளத்தையும் சேர்த்துச் சொல்'' என்ருன்.

சாமிநாதன் திடுக்கிட்டான். பரி தாபமாக முரளியைப் பார்த்தான்.

''சார்! என்னுடைய சம்பளம் கிடக் கட்டும். முதலில் போன் பில்லையும், கரண்ட் பில்லையும் கட்டிவிட்டால் பிறகு சமாளித்துக் கொள்ளலாம்'' என் ருன் சாமிநாதன், பயந்தவாறு.

''எல்லாவற்றையும் ஒரே நேரத்தில் சமாளித்து விட வேண்டும்'' என்ருன் முரளி, உறுதியுடன்.

''அவசரத்துக்கு யாரிடமாவது கடன் வாங்கினுல்...'' என்று தயங்கிய படி கூறினுன் சாமிநாதன்.

''இப்படி மற்றவர்களுடைய கையை எதிர்பார்த்து எத்தனை நாளைக்குத்தான் இதை ஓட்டுவது? இப்படிப் பிச்சை எடுப்பதை விடப் பத்திரிகையையே மூடி விடலாம்'' என்ருன் முரளி, கோபத் துடன். பிறகு, ''நான் வெளியூர் போகிறேன். இரண்டு நாட்களில் வந்து விடுவேன்'' என்று கூறிவிட்டுக் காரில் ஏறிச் சென்ருன்.

சொந்த ஊருக்குச் சென்று பாக்கி இருந்த நிலத்தை விற்ருன். அவனு டைய மாமா தடுத்துப் பார்த்தார். பயனில்லை. இரண்டு நாட்களில் இருபதி ஞயிரம் ரூபாயுடன் வந்து சேர்ந்தான் முரளி.

அவனுக்கு இருந்த சொத்துக்கள் அனைத்தும் போய்விட்டன. இனி இருப் பது ஒரே ஒரு வீடுதான். நிலத்தை விற்றுப் பணத்தைப் பெற்றபோது அவ னுடைய மாமாவின் கண்களிலிருந்து வடிந்த கண்ணீர், முரளியின் நினைவில் திரும்பத் திரும்ப வந்து வாட்டியது.

'பாரதமணி' பத்திரிகைக்கு எதிர்ப் பும் பகையும் வளர வளர முரளியின் வைராக்கியமும் வளர்ந்து கொண் டிருந்தது. அவனுடைய பிடிவாதத்தை மாற்ற யாராலும் இயலவில்லை.

ஊரிலிருந்து திரும்பிய அன்றே கட்ட வேண்டிய பாக்கிப் பணங்கள் எல்லா வற்றையும் கட்ட ஏற்பாடு செய்து விட்டு, மறு நாள் அச்சாக வேண்டிய 'பாரதமணி'யையும் மேற்பார்த்துவிட்டு முரளி வீடு திரும்பியபோது, இரவு மூன்று மணியாகி விட்டது. படுக்கை யில் படுத்த மறு கணம் வாசற் கதவைப் படபடவென்று தட்டும் ஒலி கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தான். (தொடரும்)

# வெல்டிங் ஒரு மூன்றெழுத்து வார்த்தை

*அதற்குச் சிறிது விளக்கம் தேவை*

அந்த மூன்று எழுத்துக்கள் ஐஓஎல் என்பது தெளிவு. ஏனெனில் ஐஓஎல் (இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட்) வெல்டிங் தொழில் நுட்பத்தில் முன்னேற்றத்துக்கு எப்போதும் முன்னோடியாக இருந்து, இந்த நாட்டில் புதிய வெல்டிங் உத்திகளை புகுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஐஓஎல் நம் நாட்டிலேயே பலவகை வெல்டிங் சாதனங்களையும் அதற்குச் சம்பந்தமுள்ள வேறு பொருள்களையும் செய்துள்ளதோடு வேறு எங்கும் உள்ள சிறந்த தொழில் நுட்பவாதிகளுக்குச் சமமான வெல்டிங் தொழில் நுட்பவாதிகள் பலரையும் பயிற்றுவித்துள்ளது.

இன்று நாட்டின் ஒவ்வொரு பெரிய தொழில் பிரதேசத்திலும் 60-க்கும் அதிகமான தொழிற்கூடங்கள், அலுவலகங்கள், டிப்போக்கள், கம்பிரஸிங் நிலையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது. ஒரு விரிவான விநியோகிப்புப் பணியையும் அது செய்து வருகிறது. வெல்டிங் சம்பந்தமாக எழக்கூடிய எந்த ஒரு பிரச்னையையும் தீர்த்து வைக்க இந்தியா முழுதும் ஐஓஎல் தொழில் நுட்ப நிபுணர்களும், சர்வீஸ் இன்ஜினியர்களும் பணியாற்றுகின்றனர்.

வெல்டிங் துறையில் முதல்வர்கள் :

**IOL**

IOC - 1788 TAM

# இரண்டு காலைப் பொழுதுகள்

கூடம், கூடமாக இல்லை. கூட்டமாக இருந்தது.

எப்பொழுதும் எங்கேயாவது சுற்றிக் கொண்டு திரியும் பெரிய அண்ணு, ஆடி ஓய்ந்த பம்பரமாக வந்து நின்றார். அம்மா வுக்குப் பாதி பிளட்பிரஷர். மீதி ஆர்ப்பாட் டம், அட்டகாசம். வீதியோரத்தை ஒட்டிய அறையை விட்டு அவள் வெளியே வரவேண் டும் என்றால் தலை போகிற காரியம் ஏதாவது ஒன்று நடந்திருக்க வேண்டும். 'ஏதோ ஒன்று நடந்து விட்டது' என்று மௌன அறிக்கை விடுவது போல, அவள் இப்பொழுது கூடத் தில் நின்று கொண்டிருந்தாள். சின்ன அண்ணு இந்த நேரத்தில் கிளப்பில் ரம்மி ஆடிக் கொண்டிருப்பான். அந்த ரம்மிப் புலி இன்று தன் வேட்டைக்குப் போகாமல் கூடத் தில் நின்று கொண்டிருந்தது. பெரிய மன் னிக்கு அடுக்களைதான் சாம்ராஜ்யம். அதை விட்டு அவள் வெளியேறுவது அபூர்வம். இப்பொழுது அவளும் அபூர்வமாகக் கூடத் தில் நின்று கொண்டிருந்தாள். சின்ன மன் னிக்குச் சாயங்கால நேரத்தில் வீட்டில் இருப் பது என்றால் படு'போர்'. இப்பொழுது அவள் பல பொழுதுபோக்குகளைத் தியாகம் செய்துவிட்டுக் கூடத்தில் நின்று கொண் டிருந்தாள். கல்பனுக் குட்டிக்கு விவிதபாரதி என்றால் உயிர். ரேடியோவின் அருகில் எப் பொழுதும் பழியாகக் கிடப்பாள். இப் பொழுது அவள் உயிரை எங்கேயோ வைத்து விட்டுக் கூடத்தில் நின்று கொண்டிருக்கிறுள். ராமுவும் கோபுவும் விளக்கேற்றி வைக்கும் நேரத்தில் மற்றவர்கள் காதில் விழுவதற்காக மூன்று வீடுகளுக்குக் கேட்கும் சத்தத்தில் பாடத்தைப் படிப்பார்கள். இப் பொழுது மற்றவர்களுக்குத் தங்கள் பாடத்தைப் பற்றிக் கவலை இல்லை என்பதை நன் ருகத் தெரிந்து கொண்டு, கூட் டத்தோடு சேர்ந்து கோவிந் தாப் போடுவதைப் போல் நின்று கொண்டிருந்தார்கள்.

அப்பா ஒருவர்தான் இன் னும் வரவில்லை. அவர் மாடி யில்தான் இருக்கிறார். தபால் இலாகா வில் பெரிய உத்தியோகம் செய்து ரிடையரான பிறகு, அவர் வெளி உலகத்தி லிருந்து முழுதுமாக விலகி, மாடியிலேயே ஒதுங்கி விட்டார். தினசரி காலையில் 'ஹிந்து' வைப் புரட்டிப் பார்ப்பார். எல்லாம் மிதப் பான கண்ணேட்டம்தான். அதற்கப்புறம் வேதாந்த நூல்களில் மூழ்கி விடுவார். பனிக் காலம் வந்துவிட்டால் 'ஹிந்து'வும் இல்லை. வேதாந்தமும் இல்லை. ஆஸ்த்மாதான்! நாளெல்லாம் வயிற்றுக்கு அடியில் ஒரு தலை யணையை அமுக்கிக் கொண்டு துடிப்பார். பெரிய இழுப்பு இல்லை. இருமல் இல்லை. அவரைப் போலவே அவருடைய ஆஸ்த்மா வும் ரொம்ப அடக்கம். மூச்சை யாரோ அழுத்திப் பிடிப்பது மாதிரி இருக்கும். நெஞ் சுக்குள் ஒரு பாறை முளைத்து வளர்வதுபோல் இருக்கும். ஒவ்வொரு தடவையும் மூச்சு விடும்போது. அவர் அந்தப் பாறையைப் புரட்டித் தள்ளுவதற்குப் படுகிற பாடு....

இப்பொழுது பனிக் காலம். அப்பா தம் வயிற்றில் மடித்து வைத்திருக்கும் தலை யணையை எடுத்து வைத்துவிட்டு, மூச்சு விடுவதற்குக் கொஞ்சம் வரம் வாங்கிக் கொண்டு மாடியிலிருந்து இறங்கி வருகிறார்.

கூடத்தில் நின்று கொண்டிருந்தவர் களுடைய பார்வை மாடியை நோக்குகிறது.

எல்லோருமே ஆஜர் — ஒருத்தியைத் தவிர.

அவளை எதிர்பார்த்துத்தான் அவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

மணி என்ன ? 7—10.

அவள் வருகிற நேரம்தான். ஐந்து மணிக்கு ஆபீஸ் விடுகிறது. அவள் அம்பத் தூரிலிருந்து வர வேண்டுமே !

**வா**சலில் நடையோசை கேட்கிறது.

மீனு வந்து விட்டாளா ?

கூடத்தில் நின்று கொண்டிருந்த அத்தனை பேர்களுடைய கண்களும் மழைச் சரம் போல் பாய்ந்து வாசலில் ஒடி நிலைக்கின்றன.

மீனுதான் !

அவள் முகத்தில் களைப்புத் தெரிகிறது. அதைவிட அவளுக்கு வயது இருபத்தாறு என்பது நன்ருகத் தெரிகிறது. பருவத்தின் கவர்ச்சி குறைந்த அநுபவத்தின் அழுத்தம் தெறிக்கிற முகம். எதையும் ஆர்வத்தை விட்டு ஆழ்ந்து நோக்குகிற கூரிய விழிகள். உழைத்து உழைத்து மினுமினுப்பை இழந்த உடல்.

அப்பா அவளையே பார்க்கிறார். இந்தப் பார்வைக்கு ஒரு முடிவே இல்லையா ?

மீனு வாசற்படியில் ஏறி உள்ளே நுழை கிறுள். கூடத்தில் நின்றவர்களைப் பார்த்த வுடன் அவள் அப்படியே நின்று விடுகிறுள்.

ஒரு நாள் கிழமையானுல்கூட அவர்கள் இப்படி ஒரே சமயத்தில் ஒன்றுசேரமாட் டார்கள். இப்பொழுது சேர்ந்திருக்கிறார்கள். இதற்கான காரணத்தை யூகித்து உணர்ந்த போது, அவள் நெற்றியில் இரண்டொரு குறுக்குக் கோடுகள் விழுந்தன.

எதிரே நின்று கொண்டிருந்தவர்களின் பார்வை அவளை எரித்தது.

மீனுவுக்குப் புரிந்து விட்டது ! அவர்கள் அவளை எதிர்க்கத் தயாராக நிற்கிறார்கள். அது அவள் எதிர்பார்த்ததுதான். இதற்கு மேல் அவர்களை எதிர்பார்க்க என்ன இருக் கிறது? உள்ளே பொருமிக் கொண்டிருப்ப வர்கள், இனிமேல் பொத்துக் கொண்டு கொட்டப் போகிறார்கள். அது வரை ஏன் நின்று கொண்டிருக்க வேண்டும்? நடந் தாள். மாடியிலிருந்த தன் அறைக்குப் போவ தற்காகப் படியில் காலெடுத்து வைத்தாள்.

''நில்லடி !'' என்று அம்மா கூச்சல் போடு கிறுள். அவள் எப்பொழுதுமே கடல் அலை

தான். அப்படித்தான் கூச்சல் போடுவான். ஆனால் அந்தக் கூச்ச லில் ஊடாடுகிறதே, குரோதம், அதுதான் புதிது.

கட்டை போட்டது போல நின்றான் மீனு.

"உங்களைத்தானே ?"!

அம்மா இப்படி அழைத்தால் அப்பாவைக் கூப்பிடுகிறாள் என்று அர்த்தம்.




அப்பா கண்களைத் திறக்கிறார். பொங்கிப் பொங்கிக் கொண்டிருந்த அம்மாவை அமைதியாகப் பார்க்கிறார்.

"எங்களை யெல்லாம் இங்கே நிறுத்தி வைத்து விட்டு நீங்கள் கண்ணை மூடிக் கொண் டிருந்தால் எப்படி ?" என்று அப்பாவின் மேல் பாய்கிறாள் அம்மா.

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?" என்று மஃப்ளரைத் தம் தலைக்கு உயர்த்திக் கொண்டு கேட்டார் அப்பா.

"மீனுவை இரண்டில் ஒன்று கேட்டுச் சொல்லுங்கள். நாங்கள் வெளியே தலை நிமிர்ந்து நடப்பதா? இல்லே, தூக்குப்போட் டுக் கொள்வதா ? கேட்டுச் சொல்லுங்கள்" என்று வெறியோடு கத்தினான் சின்ன அண்ணா.

அப்பா ஒரு 'தடவை கண்களை மூடிவிட்டுத் திறந்தார். "நீங்கள் மீனுவிடம் கேட்க விரும்புவதை என் மூலமாக ஏன் கேட்க விரும்பு கிறீர்கள்? நீங்கள் நேரிடையாகக் கேட்டுவிட்டுப் போங்களேன் !" என்றார்.

"நீங்கள் இருக்கும்போது நாங்கள் எப்படிக் கேட்கமுடியும்?" என்று கொம்பேறி மூக்கனைப் போல் பாய்ந்தார் பெரிய அண்ணா.

"நான் இல்லே என்று நினைத்துக் கொண்டு கேளுங்களேன் !"

செப்பிடு வித்தைக்காரனின் மாஞ்செடி யைப் போன்றவள் அம்மா. அப்பாவைப் பார்த்தாள். "நீங்கள் எப்பொழுது வேதாந் தத்துக்குப் போனீர்களோ, அப்பொழுதே இந் தக் குடும்பத்தில் இல்லாமல்போய்விட்டீர்கள். ஆனால் நீங்கள் இல்லாமல் இருந்த இடத்தில் உங்களை ஒரு பாவனையாக வைத்துக் கொண்டு நாங்கள் இந்தக் குடும்பத்தை நடத்திக் கொண்டு போகிறோம். நீங்கள் இப்பொழு தும் ஒரு பாவனையாக இருக்க முடியாது. நாங்கள் இருக்கவும் விடமாட்டோம். நீங்கள் விசுவரூபம் எடுத்தே ஆக வேண்டிய ஒரு பெரிய காரியம் இங்கே நடந்திருக்கிறது. தெரிகிறதா ?" என்று அதட்டினாள்.

எல்லாம் தெரிந்திருந்தும் அப்பா, 'மோத லும், துள்ளலும் தண்ணீருக்குத்தானே தவிரப்

• அட்டைப் • படக் • கதை

வாசவன்

விஜயா

பாறைக்கு இல்லை' என்பதைப் போலத் திட வைராக்கியத்துடன் கூட்டத்தில் இருந்தவர்களை யெல்லாம் ஒரு முறை பார்த்து விட்டு, முகட்டில் பார்வையைப் பதித்தார்.

"அப்பா, ஒரு பாறை அம்மா! அவரை அசைக்க உன்னால் முடியுமா?" என்று அம்மாவின் கோபத்தைக் கிளறினார் மூத்த அண்ணா.

"அப்பா, நம் குடும்பத் தலைவர் இல்லை, அம்மா! சகலத்தையும் துறந்த துறவி! மானத்தைக்கூடத் துறக்கத் தயாராகிவிட்டார். ஆனால் அவரால் மஃப்ளரைத்தான் துறக்க முடியவில்லை!" என்று அப்பாவை நையாண்டியாகத் தாக்கினான் சின்ன அண்ணா.

இவ்வளவையும் மாடிப்படியில் நின்று கேட்டுக் கொண்டிருந்த மீனாவுக்கு, அப்பொழுது அப்பாவைக் காப்பாற்ற வேண்டியது அவசியமாக இருந்தது. இன்னும் கொஞ்சம் போனால் அவரைச் சிதர்த் தேங்காய் விட்டு விடுவார்கள் போலவும் இருந்தது. இந்த நிலையில் அவர்கள் அப்பாவின் மூலமாக ஒரு குற்றச்சாட்டை வாசிக்கும் வரையில் காத்துக் கொண்டிருக்காமல், தானே நேரே போய் ஆஜராகி விடுவது என்று நினைத்து, கூடத்தை நோக்கித் திரும்பி நடந்தாள்.

அவர்கள் நடுவே வந்து நின்று கொண்டாள் மீனா. "அப்பா, என்னிடம் என்ன கேட்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்? அதை நீங்களே கேட்கலாம். என்னை என்ன கேட்கப் போகிறீர்கள்?" என்று படபடவென்று கேட்டாள்.

"அந்த அசிங்கத்தை நான் வாய் திறந்து சொல்ல வேண்டுமா? நீயே படித்துப் பார்" என்று, சட்டைப் பையிலிருந்து ஒரு தபால் கவரை எடுத்து அவள் எதிரே வீசினார் பெரிய அண்ணா.

அந்தக் கவரை எடுத்து விலாசத்தைப் பார்த்தாள் மீனா. அதில் அவள் விலாசமிட்டிருந்தது. அதை எழுதிய கையெழுத்துப் புரிகிறது. அது புரிந்தவுடனே கடிதத்துக்குள்ளே என்ன விஷயம் இருக்கும் என்பதும் புரிகிறது. இந்த இரண்டையும் புரிந்து கொண்டவுடனே, இங்கே நின்று கொண்டிருப்பவர்களின் போராட்டத்துக்குக் காரணமும் புரிகிறது.

புரிந்ததையே புரிந்து கொள்வது போல் பிரிக்கப்பட்டிருந்த கவரைத் திறந்து, உள்ளே இருந்த கடிதத்தை எடுத்துப் படித்தாள் மீனா.

"அன்புள்ள மீனா!

இந்தத் தடவை என்னை நீ ஏமாற்ற முடியாது. நாளைக் காலையில் ஆறு மணிக்கெல்லாம் மயிலாப்பூர் குளத்தண்டை வந்து சேர்ந்துவிட வேண்டும். நாம் அங்கிருந்து திருப்போரூருக்குச் செல்கிறோம். அங்கே நமக்கு முருகன் சந்நிதானத்தில் திருமணம். நான் எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டேன். கட்டாயம் உன்னை எதிர்பார்க்கிறேன்.

— மகாதேவன்."

அவள் கடிதத்தைப் படித்து முடித்து விட்டுத் தலை நிமிர்ந்த போது, பெரிய அண்ணாவின் பார்வை அவளைச் சுட்டெரித்தது. "யார் அவன் மகாதேவன்?" என்று கர்ஜித்தார்.

"உன்னுடைய கேள்விக்கு நான் அப்புறம் பதில் சொல்கிறேன். முதலில் நான் கேட்பதற்குப் பதில் சொல். எனக்குத் தபாலில் வந்த கடிதத்தை ஏன் பிரித்தீர்கள்? அது கேவலம் இல்லையா?" என்று மனத்தாங்கலோடு கேட்டாள் மீனா.

"உனக்கு எந்தப் பயலோ கடிதம் எழுதுகிறான். அது கேவலம் இல்லை. நாங்கள் பிரித்துப் பார்த்ததுதானா கேவலம்?" என்று சின்ன அண்ணா சீறினான்.

"மகாதேவன் எந்தப் பயலோ இல்லை. என் காதலர்!" என்று தலையை நிமிர்த்திக் கம்பீரமாகச் சொன்னாள் மீனா.

"அடி, பாவி! இதைச் சொல்ல உனக்கு வெட்கமாக இல்லையாடி? உனக்கு ஏது வெட்கம், மானம் எல்லாம்? இருந்திருந்தால் அந்தப் பாவிப் பயலோடு இப்படிக் கூத்தடித்திருப்பாயா?" என்று கத்தினாள் அம்மா.

மீனா வேதனையோடு சிரித்தாள். "அம்மா! தான் பெற்ற பெண்ணையே இப்படித் தூற்றிப் புடைக்கும் ஓர் அம்மாவை இப்பொழுதுதான் நான் பார்க்கிறேன். நான் கூத்தடிப்பதாக இருந்தால் மகாதேவன் இப்படி ஒரு கடிதத்தை எழுதி இருக்கவே மாட்டார். அவர் ஆயிரம் மைல் தொலைவில் இல்லை. என் அலுவலகத்தில் என் அருகிலேயேதான் இருக்கிறார். அவர் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் விஷயத்தை நாங்கள் நேரிலேயே பேசிவிட்டோம். பிறகு ஏன் இந்தக் கடிதம் என்று நீ கேட்கலாம். நான் இந்த வீட்டிலிருந்து திருட்டுத்தனமாக ஓட விரும்பவில்லை. உங்களுக்கெல்லாம் நான் கிளம்பிப் போகிற விஷயம் தெரிய வேண்டும் என்பதற்காகத்தான் அவரை விட்டு ஒரு கடிதம் எழுதச் சொன்னேன். உங்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். பிறருடைய விஷயங்களில் உங்களுக்கு அக்கறை இருக்கிறதோ, இல்லையோ, அக்கப்போரில் உங்களுக்கு அக்கறை அதிகம். எனக்கு வந்த கடிதத்தை ஒரு தவறான மனப்பான்மையுடன் சந்தேகித்துப் பிரித்துப் பார்ப்பீர்கள் என்று நான் நினைத்தேன். நீங்கள் என்னை ஏமாற்றவில்லை. நான் நினைத்ததைப் போலவே எனக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டீர்கள். இதனால் என்னுடைய சிரமம் குறைந்து விட்டது. 'வீட்டை விட்டுப் போகப் போகிறேன்' என்று இனி நான் உங்களிடம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லாமல் போய் விட்டது...."

"பார்த்தாயா, அம்மா, இவள் நெஞ்சழுத்தத்தை? நமக்குத் தெரிய வேண்டும் என்பதற்காக அந்தப் பயலை விட்டுக் கடிதம் எழுதச் சொன்னாளாம்! இவளை நான் கொல்லாமல் விடப் போவதில்லை' என்று மூர்க்க வெறியோடு கத்திய பெரிய அண்ணா, மீனாவின் கழுத்தில் இரண்டு கைகளையும் பதித்து அழுத்த —

அவள் விழிகள் பிதுங்கின.

"எடுடா, கையை!" அந்தக் கூடத்தையே கிடுகிடுக்க வைத்தது திடீரென்று எழுந்த அப்பாவின் குரல்.

அப்பாவா? அவருக்கும் கோபமா? அவருக்கும் இப்படிக் கத்தத் தெரியுமா?

யாராலும் நம்ப முடியவில்லை.




உயர்வின் சின்னம்

ESTD : 6-1-1947

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

பதிவு செய்யப்பட்ட அலுவலகம் : திருநெல்வேலி - 6
தொலைபேசி எண் : 274

மத்திய அலுவலகமும், முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும் :
"S.V.C.F." பில்டிங், 36-B, மவுண்ட் ரோடு, சென்னை-2
(ஸ்பென்ஸர் & கம்பெனி எதிரில்) தொலைபேசி எண்: 84244

## இது எங்கள் வெள்ளி விழா வருடம்

**31 - 3 - 70ல் அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 5 லட்சம். மொத்த ஆஸ்திகள் ரூ. 2.34 கோடிக்குமேல். சீட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 4.58 கோடிக்குமேல். செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வும் 1.76 லட்சம்.**

அலுவலக நிர்வாகம்

மானேஜிங் டைரக்டர் : ஸ்ரீ ஏ. ஆர். ராமசாமி
டைரக்டர்கள் :
ஸ்ரீ ஆர். எம். அருணாசலம்
ஸ்ரீமதி ஆர். எம். மெய்யம்மை ஆச்சி
ஸ்ரீ எஸ். பி. ஆர். ராமஸ்வாமி எம். ஏ.
கல்கத்தா ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியா நான்பாங்கிங் பிரிவு அங்கீகாரம் பெற்றுள்ள வெளி டைரக்டர்

தொழில் விபரம் :

பெங்களூரிலும் மாநில சிட் பண்ட் சட்டப்படி தமிழ்நாட்டிலும், பாண்டிச்சேரியிலும் பிரதி மாதம், மாதம் மும்முறை தினசரி சீட்டு ரூ. 10,000 வரை மதிப்புள்ள ஏலச் சீட்டுகள் எங்களது 38 கிளைகளில் நடத்தப்படுகின்றன.

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்கிங் அல்லாத நிதி கம்பெனிகள் துறை, 29-10-66-ல் வெளியிட்ட அறிக்கை DNBC I/ED (S) 66 பாரா 2 (1) (f)ன் உட்பிரிவு (x)ன்படி மேனேஜிங் டைரக்டரால் காரண்டி செய்த லோன் வாங்கப்படுகிறது.

| தொகை | வட்டி விகிதம் ஒரு வருடம் | வட்டி விகிதம் இரண்டு வருடம் |
|---|---|---|
| ரூ. 300/- ரூ. 5,000/- | $8\frac{1}{2}$% P. A. | 9% P. A. |
| ரூ. 5,000/-க்கு மேல் | 9% P. A. | $9\frac{1}{2}$% P. A. |

**எங்கள் எந்தக் கிளைகளிலும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளக்கூடிய வட்டி செக்குகள் 6 மாதங்களுக்கு ஒரு முறை அனுப்பப்படும்**

கடந்த மூன்று வருடங்களின் ஆதாயமும் டிவிடெண்டும்

| வருடம் | வரி கொடுப்பதற்குமுன் லாபம் | வரி கொடுத்த பின் லாபம் | டிவிடெண்ட் விகிதம் |
|---|---|---|---|
| 1967-68 | 89,468-58 | 28,468-58 | 17% |
| 1968-69 | 93,125-26 | 34,125-26 | 17% |
| 1969-70 | 100,582-77 | 34,582-77 | 17% |

பொறுப்புகள் 31 - 3 - 1970

| | |
|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வ் நிதி | ரூ. 1,75,608 |
| காரண்டி செய்த லோன் | ரூ. 46,35,729 |
| சீட்டு இதர பொறுப்பு வகைகள் | ரூ. 1,83,79,227 |
| தற்காலிகக் கடன் | ரூ. 2,34,989 |
| மொத்தம் | ரூ. 2,34,25,553 |

ஆடிட் செய்த பாலன்ஸ் ஷீட்டுகள் வேண்டுபவருக்கு அனுப்பப்படும்

புதிய ரூ. 25,000 மதிப்புள்ள "எம்" குரூப் சீட்டுகள் எங்கள் கீழ்க்கண்ட கிளைகளில் நடத்தப்படும்

| விலாசம் : | | தொலைபேசி எண் : |
|---|---|---|
| | 36-பி, மவுண்டு ரோடு, சென்னை-2 | 84244 |
| | 13, வடக்கு வெளி வீதி, மதுரை | 30559 |
| | 12, கிலேதார் தெரு, திருச்சி | 4276 |
| | 43, ஸிவ்வதுராயல் ரோடு, பெங்களூர்-1 | 73953 |

அனுமதித்த தேதி : 31-12-1970

| | | |
|---|---|---|
| K. A. ராம், பி. ஏ., பி. எல். | V. மல்லையா எம். ஏ., பி. எல். | AR. ராமசாமி |
| மத்திய அலுவலக மானேஜர் | பொதுஜனத் தொடர்பு அதிகாரி | மானேஜிங் டைரக்டர் |

"அவள் கழுத்தில் இருக்கிற உன் கையை எடுக்கப் போகிறாயா, இல்லையா?" என்று கேட்டுக் கொண்டே சோபாவிலிருந்து விருட்டென்று எழுந்து நின்றார். அவருடைய முகமும், கண்களும் நெருப்பைக் கக்குவது மாதிரி 'தகதக' வென்று மின்னின. "நீ மாடிக்குப் போ!" ஒரு கை மீனுவையும், இன்னொரு கை மாடியையும் காட்டின.

அவள் குழப்பத்தோடு விழித்தாள்.

"மீனு! உன்னைத்தான் சொல்கிறேன். நீ உன் அறைக்குப் போ !"

அதற்கப்புறமும் அவளால் குழம்பிக் கொண்டு நிற்க முடியவில்லை. மாடியை நோக்கி நடந்தாள்.

கொஞ்ச நேரம் நீர் வீழ்ச்சியாகக் கொட்டிய அப்பா, அயர்ந்து போய்ச் சோபாவில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டார்.

"அப்பா.....!" பெரிய அண்ணு புயலாகச் சீறினார்.

அவர் பாதிக் கண்களைத் திறந்து கொண்டு, "என்னடா ?" என்று வெறுப்போடு கேட்டார்.

"மீனுவை மேலே போகச் சொல்வதற்கு நீங்கள் யார்?" என்று கசப்பான குரலில் கேட்டார் பெரிய அண்ணு.

"நான் அவள் அப்பா !"

"நீங்கள் இவ்வளவு காலமும் ஒரு வேதாந்தியாகத்தான் இருந்தீர்கள். அப்பாவாகவே இருந்ததில்லை......"

"இப்பொழுதுகூட அப்பாவாக இருக்க வேண்டாம் என்றுதான் நினைத்தேன். ஆனால் நீ விடவில்லை. குழந்தையை நீ கொல்லப் போனாய். அப்பொழுதுகூட நான் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். அவளை ஓர் அநாதையைப் போல் சாட நான் யாரையும் அநுமதிக்க முடியாது."

"அவளைக் குழந்தை என்று சொல்லாதீர்கள் அப்பா! எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது" என்று நல்ல தெறிக்கக் கத்தினன் சின்ன அண்ணு.

அவனைத் தள்ளி விட்டு விட்டு அப்பாவின் முன்னால் வந்து நின்று கொண்ட அம்மா, "உங்கள் குழந்தை நம்ம மானத்துக்கு உலை வைக்கப் போகிறான். அது உங்கள் புத்தியில் உறைக்கவில்லையா?" என்று பொங்கினுள்.

அப்பா கடகடவென்று சிரித்தார். எப்பொழுதுமே அவர் அப்படிச் சிரித்ததில்லை. சிறிது நேரத்தில் அந்தச் சிரிப்பு ஆத்திரமாக மாறியது. "நான் இவ்வளவு காலமாகப் பேசியதில்லை. இப்பொழுது பேசப் போகிறேன். இந்த மானம் உள்ள குடும்பத்தைச் சேர்ந்த எல்லோரும் இருக்கிறீர்கள் அல்லவா ?" என்று கூடத்தைச் சுற்றிப் பார்வையை ஓடவிட்டார். பிறகு தொடர்ந்தார்:

"உங்கள் அம்மா இந்தக் குடும்பத்துக்கு மானம் இருப்பதாகச் சொன்னுள். அந்த மானம் எங்கே இருக்கிறது என்று தேடிப் பார்க்க விரும்புகிறேன். இந்தக் குடும்பத்தில் பெரியவன் ஊர் சுற்றிவிட்டு வேளா வேளைக்குச் சாப்பிட வருகிறான். சின்னவன் சம்பளத்தை எல்லாம் சீட்டாட்டத்தில் கொண்டு போய் விடுகிறான். இதனால் எல்லாம் இந்தக் குடும்பத்தின் மானம் போகவில்லையா? ஒரு சோம்பேறி, ஒரு சூதாடி



## யானை வயிற்றில் ஓட்டல்!

அட்லாண்டிக் நகரில் உள்ள இந்த யானை உருவக் கட்டிடம் ஓட்டல்தான்.

அறுபத்தைந்து அடி உயரமும், முப்பத்தெட்டு அடி நீளமும் உடையது. யானையின் கால்கள் ஒவ்வொன்றும் பத்தடி சுற்றளவு.

துதிக்கை வழியாக வளைந்து வளைந்து செல்லும் படிகள். யானை வயிற்றில் இரண்டு தளங்களில் வசதியான ஆசனங்களும் மேஜைகளும் போடப்பட்டிருக்கின்றன.

சுற்றுலா வரும் மக்களுக்குக் கவர்ச்சியூட்ட இப்படி ஒரு ஓட்டல்!....

ஆதாரம்: 'தி லயன்'

தகவல்: ஏ. சுவாமிநாதன்

~~~~~~~~~~~~~~~~~~~~

ஆகிய இரண்டு அயோக்கியன்களின் பெண்டாட்டி பிள்ளைகளுக்கு, மீனு ஓர் ஆண் பிள்ளையைப் போல் ஆபீஸுக்குப் போய் மாசம் எழுநூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு வந்து போடுகிறாள். ஒரு பெண்ணின் கையை நம்பிப் பிழைக்கும் உங்களுக்கடா மானம்? நெஞ்சில் கையை வைத்துச் சொல்லுங்கள். உங்களுக்கு மானம் இருக்கிறதா? வெட்கம் இருக்கிறதா ? 'ஆண் பிள்ளை' என்ற உணர்ச்சி இருக்கிறதா? வாழவேண்டிய ஒருத்தியை உங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக மாதம் ஒன்றுக்கு எழுநூறு ரூபாய்க்கு ஏலம் விடுகிறீர்களே! அப்படிப்பட்ட நீங்களாடா மானத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள் ?"

மழை கொட்டி ஓய்ந்த மாதிரி இருந்தது.

பெரியவராகட்டும், சின்னவனாகட்டும், எவனும் வாய் திறக்கவில்லை. கடுகாய்ப் பொரிந்து கொட்டுகிற அம்மாகூட ஊமையாகி விட்டாள்.

மழை மறுபடியும் பிடித்துக் கொண்டு விட்டது. "ஏன் பதில் இல்லை? பதில் சொல்லவில்லையா? மானத்தைப் பற்றி வாய் கிழியப் பேசுகிறீர்களே! அது உங்களுக்கு இருந்திருந்தால், மீனுவைக் காலா காலத்தில் கலியாணம் செய்து கொடுத்திருக்கமாட்டீர்களா? இருபத்தாறு வயசை விழுங்கிவிட்டிருக்கிற ஒரு பெண்ணின் எதிர்காலத்தைப் பற்றி நீங்கள் ஒரு க்ஷணமாவது நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா ? நினைத்துப் பார்ப்பதில் உங்களுக்கு லாபம் இல்லை. அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விட்டால், அவ
~~~~~~~~~~~~~~~~~~~~

## மீண்டும் எண்ணுங்கள்!

தேர்தலில் சில ஓட்டுகள் வித்தியாசத்தில் தோற்றுவிட்டார், ஒரு வேட்பாளர். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவருடைய மனைவி ஒரே பிரசவத்தில் மூன்று குழந்தைகளைப் பெற்றாள். ஆஸ்பத்திரியில் நர்ஸ்



அவரிடம், "உங்களுக்கு மூன்று குழந்தைகள் பிறந்திருக்கின்றன" என்று கூறியதும் அவர் அவசர அவசரமாகச் சொன்னார்: "இருக்கவே இருக்காது; திரும்ப ஒருதரம் எண்ணிப் பாருங்கள்!"

— சரோஜா ராமச்சந்திரன்.

ளால் உங்களுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கிற வருமானம் நின்று போகும். அதனால் நீங்கள் அவள் கல்யாணத்தைப் பற்றி நினைக்கவே அஞ்சுகிறீர்கள். அவளுக்குக் கல்யாணமே நடக்காமல் போய்விட்டால்கூட உங்களுக்கு நல்லதுதான். ஆனால் தனக்கு எது நல்லது என்பதைப் பற்றி மீனு நினைக்கும்போது உங்களுக்குக் கோபம் வருகிறது. தன்னைச் சேர்ந்தவர்கள் தனக்கு ஒரு வாழ்க்கையைத் தேடித் தருவார்கள் என்று எதிர்பார்த்து ஏமாந்து போன ஒரு பெண்ணின் எதிர் நடவடிக்கையாகத்தான் மீனுவின் செய்கையை நான் காண்கிறேன். நீங்கள் உங்கள் வருமானம் நின்று போகப் போகிறதே என்று ஆத்திரப்பட்டு, அதை அப்படியே சொல்லாமல் 'மானம்' என்று நிறம் பூசிக் கத்துகிறீர்கள்.......!''

பெரிய அண்ணாவால் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. ''அப்பா.....!'' என்று கத்தினார்.

அப்பாவின் கூர்மையான பார்வை, அவர் முகத்தில் பாய்ந்தது. ''வயிற்றுச் சோற்றுக்கு மீனுவின் கையை எதிர்பார்க்கிற நீயாடா கத்துகிறாய்? வாயை மூடடா!'' என்று பல்லைக் கடித்துக் கொண்டே எழுந்தார். என்றும் வராத கோபம், ஆத்திரம். வழக்கத்துக்கு மாறான நீண்ட பேச்சு. அவரால் நிற்க முடியவில்லை. தள்ளாடிக் கொண்டே மாடியை நோக்கி நடந்தார்.

இரவு மணி பத்து.

மீனு ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு வெளியே இருண்டு கிடந்த வானத்தில் தன்னைத் தேடிக் கொண்டிருந்தாள்.

அவள் இரத்தத்தோடு கலந்தவர்கள் அவளை எவ்வளவு சுலபமாக உதறிவிடத் தயாராகி விட்டார்கள்?

''மீனு!''

பின்னால் இருந்து வந்த குரலைக் கேட்டுத் திரும்பினாள் மீனு.

அப்பா!

தம்முடைய அறைக்குள்ளேயே புதைந்து கிடப்பவர், இப்பொழுது இங்கே எதற்காக வந்திருக்கிறார்? புரியவில்லை. உபசாரத்துக்காகக்கூட அவளால் எதுவும் பேச முடியவில்லை. மௌனமாக எழுந்து நின்றாள்.

அறைக்குள் நுழைந்து அவளை நோக்கி நடந்து வந்த அப்பா, ''உட்காரம்மா!'' என்று அவள் தோளில் கையை வைத்து அழுத்தி உட்கார்த்தி வைத்துவிட்டு, தாமும் உட்கார்ந்து கொண்டு அவள் முகத்தைப் பார்த்தார். அது வெளுத்துப் போயிருந்தது. துயரங்களின் துடிப்பில் அவள் விழிகள் கலங்கியிருந்தன.

''மீனு! நீ ஏன் இப்படி ஒரேயடியாகக் கலங்கிப் போயிருக்கிறாய்? கூடத்தில் உன் தமயன்களும், உன் அம்மாவும் ஒரு வியூகம் அமைத்துக் கொண்டு உன் மீது பாய்ந்த பொழுது, நீ கொஞ்சம் கூடக் கலங்காமல் எதிர்த்து நின்றாயே! அந்தத் தைரியத்தை நீ இப்பொழுது இழந்துவிட்டாயா? நீ அமைத்துக் கொள்ளப் போகிற வாழ்க்கைக்கு அந்தத் துணிச்சல்தானம்மா மூலதனம். அதை நீ இப்படி இழந்து நிற்கலாமா? பழக்கதோஷம் என்று ஒன்று உண்டு. அதனால்தான் மனிதர்கள் எதைப் பிரியும் போதும் துக்கப்படுகிறார்கள். எதையும் விடத் தைரியம் வேண்டும். மீனு! ஏன் என்னை இப்படிப் பார்க்கிறாய்? இது வேதாந்தம் இல்லை. வரலாற்று ரீதியான உண்மை. மண்ணை விடத் தெரிந்த விஞ்ஞானியால்தான் வானத்தில் அற்புதத்தை நிகழ்த்த முடிகிறது. ஒன்றை விட்டுப் பிரியும்போது கலக்கம் வரலாம்தான். ஆனால் அது பாறையாக நின்று விடாமல் நுரையாக வழிந்து விட வேண்டும். இந்த அகத்தில் உள்ள கும்பலை விட நீ உலகம் தெரிந்தவள். ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்னால் நீ ஒன்பது தடவைக்குக் குறையாமல் யோசிப்பாய். ஒரு தெளிந்த முடிவுக்கு வந்த பிறகே நீ எதையும் செய்யத் தயாராவாய். உன்னை எனக்குத் தெரியாதா குழந்தே? இங்கிருந்து கிளம்பிப் போவதைத் தவிர வேறு வழியில்லை என்ற ஒரு தெளிந்த முடிவுக்கு வந்த பிறகே நீ நாளைக்குப் போகத் தீர்மானித்திருக்கிறாய். இதை அந்தப் பையன் மகாதேவன் கூட எழுதியிருக்கிறான்.

'' 'நீ இந்தத் தடவை என்னை ஏமாற்ற முடியாது' என்று அவன் எழுதியிருக்கிறான். அவன் பல முறைகள் கேட்டுக்கொண்ட போது நீ வீட்டை விட்டுக் கிளம்பிப் போகச் சம்மதிக்கவில்லை என்பது அந்த வரிகளிலிருந்து தெரிகிறது. பல தடவைகள் மறுத்தவள், இந்தத் தடவை போகத் துணிந்துவிட்டதை மற்றவர்களைப் போல் நான் ஆட்சேபிக்கவில்லை. இருபத்தாறு வயது வரை உனக்கு ஒரு வரன் பார்த்துக் கல்யாணம் செய்துவைக்க யோக்கியதை இல்லாத என்னால், 'போகாதே' என்று எப்படிச் சொல்ல

முடியும்? சம்சாரச் சூழலில் வேகாமல் விலகி இருப்பதாலேயே நான் ஒரு துறவியாகிவிட மாட்டேன். எனக்கும் பாசம் உண்டு. நாளைக்குத் திருப்போரூரில் நிகழப் போகும் உன் திருமணத்தின்போது இங்கிருந்தபடியே நான் உன்னை வாழ்த்துவேன். ஒரு தகப்பனுடைய கடமை வாழ்த்துவதில் மட்டுமல்ல; வழங்குவதிலும் இருக்கிறது. எனக்கு வருகிற பென்ஷன் பணத்தைக் கூட நான் கண்ணால் பார்த்ததில்லை. அதை உன் அம்மா வாங்கிக் கொண்டு விடுகிறாள். நான் உனக்கு எதைத் தான் கொடுப்பேன்? ஒரு காலத்தில் காஞ்சிப் பெரியவாள் கூட்டிய ஒரு வித்வத் சதஸில் நான் கலந்து கொண்டேன். அப்போது அவர்கள் ஆசிவழங்கி ஒரு தங்கப் பதக்கத்தையும் எனக்கு அருளினார்கள். அந்தத் தங்கப் பதக்கம்தான் உன் அம்மா கையாடாத சொத்து. அதை நான் உனக்குத் திருமணப் பரிசாக வழங்குகிறேன்'' என்று கூறிக் கொண்டே திருநீற்றுப் பையில் வைத்திருந்த அந்தப் பதக்கத்தை எடுத்து அவளிடம் நீட்டி, ''வாங்கிக்கொள்'' என்றார்.

அவள் கைகள் நடுங்கின. முகம் வியர்த்துக் கொட்டியது.

''வாங்கிக் கொள் குழந்தே!'' என்று அதைப் பரிவுடன் அவள் கையில் திணித்து விட்டு எழுந்தார்.

**ம**றுநாள் காலை. மீனு கண்களை மூடியபடி சுவரில் சாய்ந்து கொண்டிருந்தாள்.

''மீனு!''

குரல் புரிகிறது. அப்பா தான்!

கண்களைத் திறந்தாள்.

''ஏழு மணியாகிறதே மீனு! இன்னும் நீ கிளம்பவில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே அறைக்குள் நுழைந்தார் அப்பா.

''இல்லை!'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து நின்றாள் மீனு.

''ஏன் போகவில்லை? உன்னை ஆறு மணிக்கெல்லாம் மயிலாப்பூர் குளத்தங்கரை வரச் சொல்லி இருந்தானே மகாதேவன்? உனக்காக அவன் அங்கே காத்துக் கொண்டிருப்பானே மீனு?''

''நீங்கள்தான் என்னைப் போகவிடவில்லையே அப்பா!'' என்று பெருமூச்செறிந்தாள் மீனு.

''என்ன குழந்தே சொல்கிறாய்? உன்னை நான் போகத்தானே சொன்னேன்?''

''போகத்தான் சொன்னீர்கள். அம்மா போகச் சொல்லவில்லை. காஞ்சிப் பெரியவாள் வழங்கிய தங்கப் பதக்கத்தைக் கொடுத்துப் போகச் சொன்னீர்கள். அந்தப் புனிதக் கைமலர் தீண்டிய தங்கப் பதக்கத்தை வைத்துக் கொண்டு என்னால் எப்படி ஓட முடியும்? நான் வீட்டை விட்டுக் கிளம்பிப் போக நினைத்ததற்குக் காரணம், காதல் மட்டுமல்ல. இந்த இல்லத்தில் உள்ளவர்கள் முழுக்க முழுக்க என் சம்பளத்தை எதிர்பார்த்துச் சோம்பேறிகளாக வாழ்ந்தார்கள். அவர்கள் திருந்துவதற்காகவாவது நான் இந்தக் குடும்பத்தை விட்டுப் போய்விடுவது என்று தீர்மானித்தேன். அதோடு அவர்கள் என்னைச் சம்பாதித்துப் போடும் ஓர் இயந்திரமாகத்தான் நினைத்தார்களே தவிர எனக்கும் இதயம் உண்டு என்பதை எண்ணிப் பார்த்ததில்லை. என்னுடைய சேவைக்கு அவர்களிடமிருந்து பெரிதாக ஒன்றையும் நான் எதிர்பார்க்கவில்லை. துளி அன்பு அன்பைத்தான் எதிர்பார்த்தேன். என்னுடைய துரதிர்ஷ்டம் அம்மாவிட மிருந்துகூட அந்த அன்பு கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட அன்பற்ற கூட்டத்துக்குத் தொடர்ந்து உழைத்துப் போடவும் நான் விரும்பவில்லை. அதற்காகவும் நான் போக விரும்பினேன். ஆனால் ஒரு பெண், பாலைப் போல் பொங்கி வழிந்துவிடக் கூடாது. பிறந்தகத்தை விட்டு அவள் மஞ்சள் கயிற்றைக் காப்பாக அணிந்து கொண்டுதான் வெளியேறிப் போக வேண்டும். எவ்வளவு பெரிய நியாயமான காரணங்களும் ஒரு பெண்ணை ஓடிப்போக அனுமதிப்பதில்லை. நீங்கள் பெரியவாளின் தங்கப் பதக்கத்தைக் கொடுத்த பிறகுதான் இந்த உண்மைகள் எனக்குப் புரிந்தன. புரிந்த பிறகு நான் எப்படி ஓட முடியும்?''

மீனுவின் அடைபட்டுக் கிடந்த உள்ளம் திறந்து கொண்டு விட்டது. திறந்துகொள்ளட்டும்!

''அப்பா! அம்மாவும், மற்றவர்களும் என்னை எதிர்த்து நின்றபோது என்னுடைய பிடிவாதம் நியாயத்தைப் புறக்கணிக்கவும் துணிந்து விட்டது. நீங்கள் அவர்களைப் போலத் தீயைக் கக்காமல், என் முடிவை அங்கீகரிப்பது போலவும், என்னை ஆசீர்வதிப்பது போலவும் பேசி, பெரியவாளின் தங்கப் பதக்கத்தை எனக்கு வழங்கினீர்கள். அது பதக்கம் அல்ல. தர்மத்தின் வேலி. அந்தத் தர்ம வேலியைத் தாண்டி என்னால் போக முடியவில்லை...''

''என்ன சொல்கிறாய் மீனு? நீ போகப் போவதில்லையா?'' என்று கேட்டார் அப்பா.

''இல்லை.''

''மகாதேவன் ஏமாந்து போவானே குழந்தே?''

''அவருக்கு ஏமாற்றம் ஒன்றும் புதிதில்லை!''

''ஆனால் இந்தத் தடவை மகாதேவனை நான் ஏமாற விடப் போவதில்லை. இந்தக் குடும்பத்தில் இனி நான் விலகி இருக்கப் போவதில்லை. ஏனென்றால் ஒரு தகப்பன் செய்ய வேண்டிய கடமை இன்னும் எனக்குப் பாக்கி இருக்கிறது!''

அதன் பொருளை உணர்ந்து கொண்டே மீனுவின் புன்னகையில் இன்னொரு காலை மலர்ந்தது!

சாதாரண ஆண்டில் கல்கியில் இடம் பெறும் சிறப்புச் சிறுகதைகள் அனைத்திலும் சிறந்த சிறுகதையைத் தேர்ந்தெடுப்பதில் வாசகராகிய உங்கள் அபிப்பிராயமும் கோரப்படுகிறது. ஆகவே இந்த இதழையோ அல்லது இந்தக் கதை அச்சாகியுள்ள பக்கங்களையோ பத்திரமாக வைத்திருக்கவும்.

ஆசிரியர், கல்கி

# பிளேடு தயாரிப்பு முறையில் ஓர் புதிய முன்னேற்றம்

உலகத்திலே சிறந்த பிளேடுகளை தயாரிப்பதில் கையாளப்படும் மிக நவீனமும் ரகசிய தொழில் நுணுக்கமுமான பிரத்யேக முறையான ''மல்டி பேஸட் கிரைண்டிங் ப்ராஸஸ்'' மூலமாக, முதன்முறையாக பனாமா ஒரு புதிய க்ஷவர பிளேடைத் தயாரித்து அளிக்கிறார்கள். அது மட்டும் அல்ல, உலகத்திலேயே வெகு சுகமாக க்ஷவரம் செய்யக் கூடியதும், நீண்ட நாள் நன்கு உழைக்கக்கூடிய பிளேடுகளின் இரு ஓரங்களில் மட்டுமே ரசாயன முறையில் பூசப்படும் உயர்ரக ரசாயனப் பொருளான ''ஹை டென்ஸிடி பாலி டெட்ரா ப்ளூரோ எதிலீன்'' என்னும் கலவைப் பொருள் இப்புதிய பிளேடின் இரு ஓரங்களிலும் பனாமா தொழில் நுணுக்க முறை மூலம் பூசப்பட்டு இருக்கிறது.











# உலகத் துணுக்குகள் நாலு

## நல்ல செய்தி

ஐக்கிய அமெரிக்காவில் கலிபோர்னியா வைச் சேர்ந்த 'பில் பெய்லி' என்பவர் 'அக்வேரியன் டைம்ஸ்' என்ற புதிய பத்திரிகை ஆரம்பித்து அதில் 'நல்ல செய்தி'களே இடம் பெறும் என விளம் பரப்படுத்தினர்.

முதல் இதழிலேயே '.....' (குறிப் பிட்ட ஒரு நாடு) இல் 196 மிலியன் மக்கள் எந்தவிதக் குற்றத்திலும் ஈடு படாதவர்கள் என எழுதினர். (அவர் குறிப்பிட்ட நாட்டின் ஜனத்தொகை 200 மிலியனுக்கும் அதிகம்!)

## என்றும் வாழ்க!

பிரான்ஸ் நாட்டின் புகழ்பெற்ற 'ஈபஃல்' கோபுரத்தின் வயது எண்பத்தி ஒன்று. அது 'அரிமானம்' கண்டுவிட்டது. எனவே, எடுத்துவிட வேண்டும் எனச் சிலர் கூற — 'ஊஹூம் அதெல்லாம் கூடாது' எனப் பிரான்க நகர முக்கியஸ் தர்கள் (City Fathers) தடுக்க, நிபுணர் களைக் கலந்துகொண்டு முப்பத்திரண்டு மிலியன் பிராங்குகள் செலவில் அதை ரிப்பேர் செய்து மேலும் ஐம்பது ஆண்டு காலம் 'நல்ல நிலை'யில் வைக்கத் திட்ட மிட்டிருக்கிறார்களாம்!

## போச், போச், எல்லாமே போச்!

இத்தாலியில் உள்ள 'கக்லியாரி' போலீஸ் அதிகாரிகள் 'வாய்ஜெக்' (Woyzeck) என்ற திரைப்படத்தை உள் ளூர் தியேட்டரில் திரையிட ஆட்சேபித்து அந்தக் கதாசிரியரைத் 'தேவ நிந்தை' செய்த குற்றத்தின் கீழ்க் கைது செய்ய உத்தரவிட ஏற்பாடு செய்தார்களாம்.

கடைசியில் எல்லாமே கெட்டுப் போயிற்று. ஜெர்மானிய நாடகாசிரிய ரான அவர் 1837ம் வருஷமே செத்துப் போய் விட்டார்!

## நல்லெண்ணத்தின் பலன்!

நியூஸிலாந்திலுள்ள சிறைக் கைதி களின் 'தரம்' உயர்ந்து அவர்கள் 'நல்ல ரசிகர்களாக' ஆகட்டும் என்ற நல்லெண் ணத்துடன் ஜெயில் வார்டன், சாஸ்திரீய சங்கீதத்தை அவர்களிடையே அறிமுகப் படுத்தத் திட்டமிட்டாராம்.

மறு நாளே கைதிகள் அனைவரும் சேர்ந்து ஒரு விண்ணப்பம், தயாரித்து முரட்டுத்தனமாக ... எங்களை நடத்த விரும்பும் ஜெயில் அதிகாரிகளிடமிருந்து விடுவியுங்கள் என்று எழுதிச் சர்க்கா ருக்கு அனுப்பி விட்டார்கள்!





**ஊ**ர் மந்தைவெளியில் நண்பகலிலிருந்தே ஒலிபெருக்கி ஓயாமல் அலறிக் கொண்டிருக்கிறது. விதம் விதமான இசைத்தட்டுக்கள் முழங்குகின்றன. ஒரு மூலையில் சிறு பந்தல், அதில் ஒரு மேடை. அதன் மேல் நாலைந்து நாற்காலிகள்; சிறு மேஜை. நான்கு பக்கமும் வண்ணக் கொடிகள். ஆங்காங்கே ஏதேதோ எழுதப்பட்ட தட்டிகள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. நுழைவாயிலே ஒட்டினாற் போல ஒரு ஸ்டாண்டில் பெரிய அளவுப் படங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. சிறுவர் சிறுமியர் கூட்டம் இசைத்தட்டு ரசனையில் கும்மாளமிட்டுக் கொண்டிருக்கிறது. சிறு சிறு கும்பல் வெளியில் ஆங்காங்கே நின்று பேசிக் கொண்டிருக்கின்றது. பலப்பல கம்பங்கள் நாட்டப்பட்டு அதில் கொடிகள் அசைந்தாடுகின்றன. பந்தலுக்கு எதிரில் ஒரு நெடும் கொடி மரம். அதன் உச்சியில் பறக்கவிடப்படாத ஒரு கொடி கட்டப்பட்டிருக்கிறது.

அடிக்கடி ஒலிபெருக்கியில் இன்னும் சில நிமிடங்களில் தலைவர் வந்துவிடுவார் என்று அறிவிப்புக் கேட்கிறது.

முனியன் அரைப் பாட்டில் சிம்னி எண்ணெய் வாங்கவும் பீடி புகைக்க நெருப்புப் பெட்டி வாங்கவும் கடைத் தெருவுக்குச் செல்கிறான். கடைத் தெருவுக்குச் செல்ல அந்த மந்தைவெளியைக் கடந்துதான் செல்ல வேண்டும். அங்கு நடக்கவிருக்கும் பொதுக்கூட்டம் பற்றி ஒன்றும் அவனுக்குத் தெரியாது. அங்கு யார் யார் வரப் போகிறார்கள் என்பதையெல்லாம் பற்றி அவனுக்கு அக்கறையும் கிடையாது.

தன் ஓட்டைக் குடிசை இந்த மழைக் காலத்துக்குத் தாங்காதே! அதை அடைத்து நான்கு கீற்று பரப்ப முடியவில்லையே என்ற ஒரே கவலைதான் அவனுக்கு. அவன் ஓர் அன்றாடம் காய்ச்சி. அவனது கைகள் அவனது வயிற்றை நிரப்பப் படாதபாடு படுகின்றன. சில நாட்கள் ஓலமிடும் வயிற்றை நிரப்ப முடியாமல் அந்தக் கைகள் ஓய்ந்து விடும். சில நாட்கள் வேலை கிடைக்காமல் வயிறு காய்வதும் உண்டு. அந்த ஒட்டிய வயிற்றுடன் ஒட்டி நிற்கும் மற்றொரு ஜீவன். இந்த ஜீவனை உருவாக்கிய ஜீவன் அது. அந்த ஓலைக் குடிசையில் ஒண்டிக் கிடக்கிறது.

குடிசையின் சில பகுதிகளுக்கு நிலவாளம் தான் கூரை. சில பகுதிகளில் கரி ஏறிய கீற்றுக்கள் தொங்க வாடிக்கொண்டிருக்கின்றன. சில கழிகள் நீர் மடிசலால் பலவீனப்பட்டுக் கீற்றைக் கூடத் தாங்காமல் விழத் தயாராய் இருக்கின்றன. ஒரு சிறு மழை பெய்தாலும் போதும், குடிசை தாங்காது.

இந்த நினைவுதான் முனியனுக்கு. மாயவரம் மூலையில் மப்பு சூழ்ந்திருக்கிறது. இடிகளின் கர்ஜனை. தொடர்ந்து மின்வெட்டுக்கள் 'எப்படியாவது நாளைக்குள் குடிசையைச் செப்பனிட்டாக வேண்டும். நாலு கழிகள் வேணுமே... நாற்பது ஐம்பது கீற்றுகளும் வேணுமே... எப்படி வாங்குவது?' இந்தக் கவலையுடன் மந்தைவெளியைக் கடக்கிறான்.

அப்போது மேடையில் யாரோ பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

"இந்த நாட்டுக்குச் சுதந்திரம் வந்து இருபத்தி மூன்று வருடங்கள் ஆகிவிட்டன. இன்னுமா இந்த நாட்டில் ஏழைகள் இருப்பது? வறுமை இருப்பது? பாட்டாளிகள் உயிர்ப் போராட்டம் நடத்த, அவர்கள் உப்பரிகையில் உல்லாச வாழ்வு வாழ்வதா?..." முனியனுக்குப் பேச்சைக் கேட்பதில் ஒரு சுவாரசியம் ஏற்படுகிறது. ஆனால் பேச்சு முழுவதும் அவனுக்குப் புரியவில்லை. இருந்தாலும் பேச்சாளரைப் பார்க்கிறான். அவர் கையை உயரே நீட்டி, "எட்டடுக்கு மாளிகையில் பட்டுப் பஞ்சணையிலே பழ ரசம் பருகுகிறார்கள், அவர்கள்" என்கிறார். 'எவர்கள்?' முனியன் அவர் கைநீட்டிய திசையைப் பார்க்கிறான். ஆகாசம்தான் அவன் கண்ணில் படுகிறது. மேகம் கருகருவென்று ஏறியிருப்பதைக் காணவும் அவனுக்கு மீண்டும் தன் குடிசையின் நினைவு வருகிறது.

"...இந்த நாட்டுச் செல்வத்தை உருவாக்குபவனுக்கு இந்தத் தேசத்தின் பொருளாதாரத்தை வளர்ப்பவனுக்கு ஒடுங்கிக் குந்த ஒழுகாத குடிசை உண்டா? வான் முட்டும் மாளிகை கட்டுகிறாயே நீ, அவனுக்கு மண் குடிசைதானே இருக்கிறது? மழையிலே கரையும் இடிந்த சுவர்தானே... ஓலைக் குடிசைதானே... இதை நினைக்க நினைக்க என் நெஞ்சம் கொதிக்கிறது, உள்ளம் தகிக்கிறது. ரத்தக் கண்ணீர் வடிக்கிறேன்..."

முனியன் மனத்திலும் ஒரு வெம்மை உணர்வு படருகிறது. ஆமாம்! என் ஓட்டைக் குடிசைக்கு ஒரு மூங்கில் போட முடியவில்லை. கீற்று மூட முடியவில்லை. தன் குடிசையை நினைத்து முனியன் பரபரப்பு அடைகிறான்.

'ரத்தக் கண்ணீர் வடிக்கிறேன்' என்று அவர் சொன்னபோது அவரைப் பார்க்கிறான். அவர் அப்போது ஒரு கிளாஸில் — ஏதோ வெப்பாக இருக்கது — குடித்துக்கொண்டிருக்கிறார். — "இந்த ஏற்றத்தாழ்வு அகற்றப்பட, ஏழைகள் நலம் செழிக்க, பாட்டாளி இனம்

புது வாழ்வு மலர ஓயாமல் உழைக்க வேண்டும்!''

அவர் பேச்சை முடிக்கவும் ஒரு கைதட்டல். முனியனும் கைதட்டுகிறான். தன் ஓட்டைக் குடிசை செப்பனிடப்பட இவர்கள் உதவுவார்கள் என்று எண்ணுகிறான். இவர்கள் அதற்காகவேதான் இப்படி ஓயாமல் உழைக்கிறார்கள். இத்தனை பேர்களும் சேர்ந்தால் நமக்கு ஒரு புதுக் குடிசை போட்டுக் கொடுத்து விட மாட்டார்களா? அதோ அந்தப் பேச்சாளர் இவ்வளவு பரிவாகப் பேசுகிறாரே... நமக்குச் சோறு... உழைக்கும் கைகளுக்கு வேலை.... ஊதியம்... இவை தராமலா இருப்பார்? எவ்வளவு நல்லவர்! நம்மேலே எவ்வளவு அன்பு!...

ஒரு தொண்டர் மேடை மேலே ஏறுகிறார். கையில் ஒரு பிரும்மாண்டமான மாலையோடு மைக் முன்னால் ஏதோ சொல்லிவிட்டுப் பேச்சாளரின் கழுத்தில் போடுகிறார். கூட்டம் கைதட்டுகிறது. அவரோ கை கூப்பிக் குனிந்து மாலையை உடனே கழற்றி மேஜையின்மேல் வைக்கிறார்.

'இந்த மாலை எவ்வளவு பெரிசு! கோயில்லே பெரிய சாமிக்குப் போடறுப்பலே இருக்கே... இந்த மாலை என்ன விலை இருக்கும்?' அப்பாவி முனியன் பக்கத்திலே நிற்பவரைக் கேட்டு வைக்கிறான்.

''யார்யா இவரு... மாலை அஞ்சு ரூபா இருக்கும். எத்தனை ரூபாயா இருந்தால் என்னய்யா...தலைவருக்குப் போட.... இதுபோல எத்தனை மாலைகள் போட்டா என்னய்யா?''

எதற்குத் தன்மேல் எரிந்து விழுகிறார் இவர் என்று முனியனுக்குப் புரியவில்லை. ஆனால் அந்த அஞ்சு ரூபா இருந்தா இரண்டு மூங்கில் கழிகள் வாங்கலாம்... குடிசையின் ஓட்டையை அடைக்க... அம்பது கீத்து வாங்கலாம். சோறு பொங்கற இடத்தையாவது ஒழுகாமல் பண்ணலாம். இப்படித்தான் கணக்குப் போடுகிறது அவன் மனம்.

பேச்சாளர் தொடர்கிறார். ஆவேசம் அதிகரிக்கிறது. எதற்கோ மேஜையில் ஒரு குத்துவிடுகிறார். முன்னும் பின்னும் ஆடுகிறார். மைக்கைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்குகிறார். ''நாம் எதற்கும் அஞ்ச மாட்டோம். யாருக்கும் அஞ்ச மாட்டோம். இலட்சியம் அடையும் வரை போராடியே தீருவோம். பாட்டாளிகள் வாழ்ந்தே ஆக வேண்டும்! விவசாயிகள் வளம் பெற்றே ஆகவேண்டும். தொழிலாளர்கள் தாழ்வு நீங்கியே ஆகவேண்டும். ஓட்டைக் குடிசைகள் ஒட்டு விடுகளாக ஆக வேண்டும்.''

ஜிலுஜிலுவென்று காற்று அடிக்கிறது. முனியன் மனத்தில் பனி பெய்தாற் போன்றதோர் உணர்வு. தன்னையும் அறியாமல் கைதட்டுகிறான். முதலில் கைதட்டியது முனியன்தான். உடனே படபடவென்று கூட்டமும் கைதட்டுகிறது.

திக்கென்கிறது முனியனுக்கு. நாம் தவறு செய்து விட்டோமோ என்ற படபடப்பு. சுற்றுமுற்றும் பார்க்கிறான். தன்னை யாரும் கவனிக்கவில்லை. சற்று நிம்மதி. சரி, சரி இனிமேல் இங்கு நின்று கொண்டிருந்தால் நம்மையறியாமல் இந்த மாதிரி அசட்டுத்தனம் செய்து யாராவது ஏதாவது சொன்னால்?... மாலையின் விலை கேட்டதற்கே ஏனோ சீறி விழுந்தாங்களே...

மெதுவாக நடையைக் கட்டுகிறான் கண்டத் தெருவை நோக்கி.

முனியன் சிம்னி எண்ணெயோடு வீடு திரும்புகிறான். சிம்னியை ஏற்றுகிறான்.. ஓட்டை வழியே இருண்ட வானம். பளிச்சிடும் மின்னல்கள். இலேசான குளிர் காற்று. சிம்னியை நடுங்க வைக்கிறது.

''ஏண்டா, சொக்கேச முதலியாரு வூட்டுக்கு விறகு உடைக்க வாறேன்னியாமே....



# கட்சியும் கண்ணீரும்

தேநியூர் பானு

எங்கே பூட்டே...வந்து கூப்பிட்டாக...''

''அடடா... கூப்பிட்டாகளாம்மா?''

''ஆமாண்டா. எப்பவோ கூப்பிட்டாக. அந்த வேலையைச் செஞ்சா நாலு காசு கிடைக்கும்... அரிசி வாங்கக் காசில்லே வேண்ணியேடா!''

''ம்...ஆமாம்...'' கூட்டத்துக்குப் போய் உட்கார்ந்திருந்த நேரம்...... சப்புக் கொட்டுகிறான் முனியன். பேச்சாளரின் பேச்சு அவன் மனத்தில் ஒருவிதத் தெம்பைக் கொடுக்கிறது. புதுக் குடிசை, வயிறு முட்டச் சோறு, குளிருக்குப் போர்வை. அம்மாவுக்குக் கட்டிக்க ஒரு துணி. கற்பனை விரிகிறது. நம் குடிசைக்கு நாளைக்குக் கழி கிடைத்து விடும். அவர்கள் தான் சொன்னார்களே... நம்மீது அவர்களுக்குத்தான் எவ்வளவு பாசம்! படபட வென்று நாலைந்து தூற்றல்!



தபால் தந்தி அலுவலகக் கட்டிடத் திறப்பு விழாவிற்குத் தபால் தந்தி டைரக்டர் ஜெனரல், வி. ஜி. நாயுடு என்ற எம். பிக்கு ஒரு அழைப்பிதழ் அனுப்பி இருந்தார். கவரில் தபால் தலை ஒட்டப்படாததால் எம். பி. 40 பைசா கொடுத்து அதை வாங்கிக் கொண்டார். -பாலி

''பகவானே, மழை வலுக்காமல் இருக்கணும்பா. ஒழுகாத இடம் இல்லியே... இன்று இரவு மழை பெய்தால் தொப்பல் தான்....... ஒதுங்க இடம்?''

குடிசையின் வாசலில் நின்று கொள்கிறான். கூட்டம் முடிந்து ஜனங்கள் கலைந்து செல்கிறார்கள். நான்கைந்து கார்கள் அவன் குடிசையைக் கடந்து செல்கின்றன.

கார்கள் மறைகின்றன. அவை எழுப்பிய பெட்ரோல் நெடியும் புழுதியும் கலந்து முனியனைச் சூழ்கின்றன.

மீண்டும் சிந்தனை. கனவு. ஒழுகாத வீடு, ஓட்டுக் கட்டடம். போன வாரம் டவுனுக்குப் போயிருந்தபோது பெரிய மாளிகை போன்ற கட்டடம் ஒன்றில்கூட இதே கொடி பறந்து கொண்டிருந்தது நினைவுக்கு வருகிறது. அந்தக் கொடி பறந்த கட்டடம் எவ்வளவு பெரியது! ஏ அப்பா! அதே போலவா நமக்கெல்லாம் வீடு கட்டித் தரப் போகிறார்கள்? ஏ அப்பா! எவ்வளவு நல்ல மனசு! நாமும் அவர் சொன்ன படி கேட்கணும்.

படபட! இன்னும் தூற்றல் அதிகமாக வலுக்கிறது.

''ஐயையோ! மழை பெய்திடும் போல இருக்கே... அம்மா பொங்கி நாம தின்கிற துக்குள்ளேயாவது மழை இல்லாம இருந்தாத் தேவலே சாமி...''

பளிச்சென ஓர் எண்ணம் அவனுக்கு. ''ஏன், அப்படிச் செய்தால் என்ன? ஏன் அவங்க நமக்காகத்தானே இவ்வளவு பேச்சும் பேசறாங்க..நமக்காகத்தானே கட்சியே இருக்குதுன்கிறாங்க? ஆமாமா... அதான் நல்ல யோசனை. இல்லாட்டி இன்னிக்குச் சோறு துன்ன முடியாது. அந்தக் கூட்டத்திலே தின்ன நேரத்திலே முதலியார் விட்டு விறகு உடைச்சிருக்கலாம்னு நெனைச்சோமே... சேச்சே... பைத்தியக்காரத்தனம். அதான் தேவலே''— ஓடுகிறான் மந்தைவெளியை நோக்கி. இவ்வளவாவது யோசனை தோணிச்சே நமக்கு என்ற திருப்தி. மனம், பேசியவர்களை வாழ்த்துகிறது. மந்தைவெளியில் நாட்டப்பட்டிருந்த நீண்ட கழி — கொடி பறந்த கழியைப் பார்க்கிறான். நினைத்ததைச் செயல்படுத்த ஆரம்பிக்கிறான்.

மறுநாள் முனியனின் குடிசை முன் சிறு கூட்டம். எல்லாம் கட்சித் தொண்டர்கள். ஆஹா, ஊஹூ என்று கூச்சல்; ஆங்கார இரைச்சல். ஒன்றும் புரியவில்லை.

''கொல்லுடா அவனே... என்ன திமிர்டா'' இவனுக்கு. துரோகிப் பயல்.......ம்'' என்ற குரல்கள்.

'சத் சத்' அடிக்கிற சத்தம்.

''ஐயோ! அடிக்காதிங்க, அடிக்காதிங்க!''

என்ன இது? முனியன் ஓலமிடுகிறானே! ஏன் அவனை அடிக்கிறார்கள்? நெருங்கிப் போகிறேம். தவிக்கிறது மனம்.

''ஏண்டாலே. என்னடா நெனைச்சிட்டே கொடியை? அவமானமா பண்ணினே? ம்.... என்ன திமிர்டா ஒனக்கு?....''

''ம்... வைடா நாலு. கழுத்தை நெரிச்சாக்கூடப் பாவமில்லெடா இந்தப் பாவியை....''

''ஐயோ, சாமி......சாமி.....கொல்றாங்களே... கேட்பாரில்லையா?''

ஏன் முனியனை இப்படி அடிக்கிறார்கள்?

''ஐயோ! எனக்குத் தெரியாதையா... தெரியாமச் செஞ்சுட்டேன்யா... குடிசை தொர தொரன்னு மழை கொட்டிச்சே... நம்ப குடிசையெல்லாம் மெத்தை வீடா மாத்தத்தான் நாங்க இருக்கோம்னு நேத்துச் சொன்னாங்களேன்னுதான்யா ...... நான்.... நான்...'' இணறித் இணறிப் பேசுகிறான் முனியன்.

''ஏன்யா, இவர் என்ன செய்தார்?''

''என்ன செய்தானா? இன்னும் என்ன செய்யணும்யா? என்ன செய்யணும்னு கேட்கிறேன்.'' நெருப்புப் பொறி பறக்கிறது, அவர் கண்களில்.

''ஓட்டைக் குடிசையை ஒழுங்காக்க அந்தக் கழியை... ய்யா... எடுத்து...'' — முனியன் குரல் தேய்ந்து ஒலிக்கிறது.

''கொடி பறக்கிற கம்பத்தைப் பிடுங்கி இந்தப் பய.. பச்சைத் துரோகிப் பய... குடிசையிலே போட்டுக் கட்டிட்டான். பத்தல் கீற்றைப் பிரிச்சுக் கூரையிலே வெச்சிட்டான். கொடியை என்னடான்னு அந்தக் கிழத்துக்குப் போத்தி விட்டிருக்கான்... ம்.... கேட்டா அம்மா மானத்தை மறைக்கத் துணியில்லேங்கறான். என்ன திமிர் இருக்கணும்?''

ஆகா! ஏழைகளை வாழ வைக்கவே வாழும் கட்சி எவ்வளவு கருணையோடு அந்த ஏழைகளின் கண்ணீரைத் துடைக்கிறது!


பனாமா
கொள்ளைக்
கன்னி . . .
PANAMA
MADE IN INDIA
PANAMA
MADE IN INDIA
PANAMA
MADE IN INDIA
BMA-PA-S-47



★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

மருத்துவக் கல்லூரியில் பயிலுவதற்கு இரண்டாவது முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 24 பேர்களின் தேர்வும் செல்லாது என்று தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. ஏற்கனவே ஒரு முறை அரசின் தேர்வு முறையில் குறை இருப்பதாகத் தமிழக அரசுக்குத் தலைமை நீதிமன்றம் உத்தரவிட்டிருந்தும் நீதிமன்றக் கட்டளைக்கு செவி சாய்க்காமல் நல்ல ஒரு மாணவரைத் தனக்கு எதிராக நடந்தவர் என்ற ஒரே காரணத்துக்காகக் கல்லூரியில் சேர்த்துக் கொள்ளவில்லை. மருத்துவக்கல்லூரியில் மட்டுமல்ல, பெரும்பாலான அரசு நிறுவனங்களிலெல்லாம் இப்படித்தான் நடைபெறுகின்றன. அரசுக்கு வேண்டியவர், ஆளும் கட்சியினர் ஒருவருக்கு வேண்டியவர், இவர்களுக்கு வேண்டாதவர் என்ற ரீதியில் தான் அரசு நிறுவனங்களிலெல்லாம் ஆட்கள் நிராகரிக்கவோ தேர்ந்தெடுக்கவோ படுகிறார்கள். இந்தப் போக்கிற்கு நல்ல கண்டனமாகத் தலைமை நீதி மன்றத்தின் தீர்ப்பு அமைந்திருக்கிறது. அரசின் தவற்றை நீதி மன்றம் சுட்டிக் காட்டி, அந்த ஒரு மாணவருக்குக் கல்லூரியில் இடமளிக்கச் சிபாரிசு செய்தும், அரசு இதில் தன் கௌரவப் பிரச்னையைக் காட்டுவது ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்ட, ஒரு தவறும் அறியாத 24 நபர்களையும் பாதிக்கிறது.

காஞ்சி,
23–1–71 ஆ. ஜெயசந்திரன்

தங்கள் 31–1–71 கல்கியில் ''இல்லியில் ஒரு சுவாமிமலை'' என்ற கட்டுரையில், வாலாஜாபேட்டை என்று சில இடங்களில் குறிப்பிட்டுள்ளீர்கள். வாலாஜா பேட்டை வடஆர்க்காடு மாவட்டம். ராணிப்பேட்டை அருகில் உள்ளது. உத்திரசுவாமிமலை கோயிலுக்கு எங்கள் ஊரில் (செங்கற்பட்டு ஜில்லா, வாலாஜாபாத்) அருகிலுள்ள பட்டிமலைக் குப்பம் என வழங்கும் பட்டுமலை குப்பத்திலிருந்துதான் கல்கொண்டு வந்து ராஜவீதியில் சுப்பிரமணியகோயில் நிலத்தில் ஸ்தபதிகள் தங்கி வேலைகள் செய்தனர் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். எங்கள் வாலாஜாபாத் தான் அந்தத் திருப்பணிக்கு உதவியது.

வாலாஜாபாத்
28–1–71 டி. கி. இராஜகோபாலன்

★ சேலத்தில் இம்மாதம் 23, 24ஆம் தேதிகளில் திரு ஈ. வே. ரா. அவர்களின் தலைமையில் ''மூட நம்பிக்கை ஒழிப்பு மகாநாடு'' நடந்தது. வழக்கம் போல் ஆத்திகர்களின் மனம் புண்படும்படி ஸ்ரீ ராமர் படத்தைச் செருப்பால் அடிப்பதும் பிறகு தீ வைப்பதும் நடந்தன.

24–1–71 ஞாயிறன்று ஓர் ஊர்வலம் நடத்தினர். அதில் பலர் கத்தி, சுட்டி ஆகிய ஆயுதங்களுடன் சென்றனர்.

''எட்டு அங்குல நீளத்துக்கு மேற்பட்ட எந்த ஆயுதத்தையும் எந்தத் தனி மனிதனும் வீதியில் எடுத்துச் செல்லக் கூடாது'' என்ற சட்டம் ஒன்று இருப்பதைப் போலீசார் மறந்து விட்டார்களா? அல்லது அச்சட்டம் இருப்பதே அவர்களுக்குத் தெரியாதா? சட்டத்தில் தனி மனிதன் எடுத்துச் செல்லலாகாது என்று இருப்பதால் ஒரு கூட்டத்தினர் எடுத்துச் செல்லலாமா? சட்டத்தை மீறி மக்களில் ஒரு சாராரின் மனத்தைப் புண்படுத்துவதற்கு அநுமதிக்கும் ஆட்சியா ஜனநாயகம்? சேலத்தின் கலெக்டர், போலீஸ், சூபரிண்டெண்ட் ஆகியோரின் கைகள் அதிகாரத்தினால் கட்டப் பட்டிருந்ததுதான் உண்மையா? இதுவா ஜனநாயகம்? இவர்களா ஜனநாயகவாதிகள்? 'அன்புப் பாதை'யில் செல்பவர்கள்? முற்போக்கு வாதிகள்? இவர்களின் பிற்போக்குத்தனத்தை எல்லாம் வல்ல இறைவன் மன்னிப்பாராக.

சேலம்,
27–1–71 ஆ. வெ. சுந்தரராசன்

தாங்கள் 10–1–71ம் தேதி இதழ் கல்கியில் ''பொன் விழா ஆண்டு, சொல்லி மாளாத் தொண்டு'' என்னும் தலைப்பின் கீழ் இலங்கையைச் சார்ந்த பெண்மணி திருமதி ரத்னநவரத்னம் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவை ரத்தினச் சுருக்கமாகக் குறிப்பிட்டிருந்தீர்கள். இதனை எமது நாட்டில் உள்ள ஒரு பத்திரிகை, தாங்கள் இலங்கைத் தமிழைச் சிங்களத் தமிழ் எனக் கூறிவிட்டீர்களென்றும் இலங்கையில் தமிழை வளர்த்த பெரியார் ஆறுமுக நாவலருக்கு இதனால் இழுக்கு வந்து விட்டது என்றும் மிகவும் அழகற்ற முறையில் குறிப்பிட்டிருந்தது.

இதனைப் பார்த்ததும் என் போன்ற இளைஞர்களுக்கு மிகவும் வேதனையாக இருக்கின்றது. காரணம் நான் 'கல்கி'ப் பத்திரிகையைப் பல வருஷங்களாகப் படித்து வருகின்றேன். அதன் தன்மை, தரம் முதலியன எமக்குத் தெரியும். ஆனால் அதன் தரம் தெரியாத சிலர் இந்தப் பத்திரிகையின் செய்திகளை நம்பி வீணாகக் கல்கியைப் பற்றித் தப்பாக நினைக்கக் கூடும். இம்மாதிரிப் பிரச்னைகளைக் கிளப்பிக் கல்கி மீது வீணான பழி சுமத்த வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மட்டுநகர், இலங்கை
26–1–71 எஸ். செல்வராஜா

அன்பர் செல்வராஜாவுக்கு நன்றி. கல்கியின் நல்லெண்ணம் குறித்து ஐயப்படுபவர்களுக்குத் திரு செல்வராஜாவின் கடிதமே சமாதானம். –ஆசிரியர்.



# சுதந்திரக் கட்சியின் 1971 தேர்தல் அறிக்கை

பழைய காங்கிரசின் அகில இந்தியக் கமிட்டி 1970 ஜூன் 28ல் நிறைவேற்றிய தீர்மானத்தின் அடிப்படையில் ஏகோபித்த செய் முறைத் திட்டங்களை நிர்ணயித்துக் கொண்டு, திறமையான, ஊழலில்லாத, நல்லதொரு ஜனநாயக அரசாங்கத்தை, இப்போதுள்ள அரசுக்கு மாற்று அரசாங்கமாக நாட்டுக்கு அளிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வரும் தேர்தலில் சுதந்திரக் கட்சி போட்டியிட வேண்டும் என்றே நம்பியிருந்தது. காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தை ஜனசங்கக் கட்சியும் சுதந்திரக் கட்சியும் வரவேற்றதுடன், அதன் கருத்துக்களையும் ஏற்கனவே ஏற்றுக் கொண்டிருக்கின்றன.

சுதந்திரக் கட்சி இப்போதும் முன்னர் கூறிய அதே லட்சியங்களையே கடைப்பிடித்து வருகிறது. பழைய காங்கிரசின் அகில இந்தியக் கமிட்டி தனது தீர்மானத்தில் விளக்கிக் கூறியுள்ளபடி ஏகோபித்து ஏற்றுக் கொண்டுள்ள அம்சங்களின் அடிப்படையிலேயே சுதந்திரக் கட்சி தேர்தலில் போட்டியிடும். மாற்று அரசாங்கத்துக்கு ஒருமனதாக ஏற்றுக் கொண்ட இந்த அம்சங்கள்தான் குறைந்தபட்ச ஆதாரமாக எப்போதுமே இருந்திருக்க வேண்டும். இப்போதும் அப்படித்தான் இருக்க வேண்டும்.

ஏகோபித்து முடிவு செய்து கொள்ள வேண்டிய அத்தகைய செய்முறைத் திட்டங்களுக்கு உட்பட்டு, சுதந்திரக் கட்சி கீழ்க்கண்ட அம்சங்களை முக்கியமானவையாகக் கருதி அவற்றுக்குத் தேர்தலில் முதலிடம் அளிக்கும்:

## 1. அரசியல் சாஸனத்தையும், ஜீவாதார உரிமைகளையும், சுதந்திர உரிமைகளையும் பாதுகாத்தல்.

அரசியல் சாஸனத்தின் புனிதத் தன்மையை ஆதாரமாகக் கொண்டே நிலையான ஜனநாயகம் செயல்பட வேண்டும். அரசியல் சாஸனம் இஷ்டப்படி சிதைக்க வொண்ணாதது. இதை நிலைநாட்ட அரசியல் சாஸனத்தில் நமது நீதிமன்றத்துக்கு அளிக்கப்பட்டுள்ள முக்கியமான பொறுப்பையும், பணியையும் முழு மனத்துடன் எல்லாரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். அதே போல அரசியல் சாஸனத்தில் பொறிக்கப்பட்டுள்ள ஜீவாதார உரிமைகளையும் முழுமையாக, உத்தரவாதத்துடன், பாதுகாக்கவும் எல்லாரும் உறுதி கொள்ள வேண்டும். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக நாட்டுக்குள்ளும், நாட்டுக்கு வெளியேயும் சில மூலைகளிலிருந்து நம்முடைய இளம் ஜனநாயகத்தைக் காக்கும் அரசியல் சாஸனத்தைச் சிதைக்கப் பல முயற்சிகள் ஏற்பாடாகவே செய்யப்பட்டு வருகின்றன. இம்முயற்சிகள் மூலம் இந்திய மக்களின் சுதந்திரங்கள் அழிந்து மறைந்து போவதுடன், வருங்காலத்தில் எந்த அரசாங்கமும் சட்டப்படி சாதாரண மக்களின் மிகச் சாதாரண சிறிய சொத்துக்கள், ஏழை விவசாயிகளின் சிறு பண்ணை நிலங்கள், பிராவிடெண்ட் சேமிப்புக்கள், மாதச் சம்பளம் வாங்கி ஜீவிக்கும் உத்தியோகஸ்தர்கள் எடுத்துள்ள இன்ஷூரன்ஸ் பாதுகாப்புத் தொகை முதலியவைகளைப் பறிமுதல் செய்து விடக் கூடிய நிலைமை தோன்றும்.

## 2. ஒழுங்கும் அமைதியும் நாட்டில் நிலவச் செய்தல்.

ஒழுங்கும் அமைதியும் துரதிர்ஷ்டவசமாக இப்போது வேண்டுமென்றே புறக்கணிக்கப்பட்டு வருகின்றன. மக்களின் உயிர்களும், உரிமைகளும் சட்ட முறையும் அமைதியும் கண்டிப்பான வகையில் நிலைநாட்டப்படுவதன் மூலம் பாதுகாக்கப்பட வேண்டும். எந்தெந்த மூலைகளிலிருந்தும் பலாத்காரம் தோன்றினாலும், அதற்குச் சிறிதும் இடமளிக்கக் கூடாது.

## 3. வேலை வாய்ப்பு

தவறான கொள்கைகளாலும், தவறான திட்டங்களாலும் நாட்டின் பொருளாதாரத்துக்கு இப்போது ஏற்பட்டுள்ள சீர்குலைவை மாற்றித் திருத்தியாக வேண்டும். இதற்கு, ஆரம்பம் மகாத்மா காந்தி தமது காலத்தில் அடிக்கடி வலியுறுத்தியதுபோல் வேலை வாய்ப்பை உண்டாக்கிக் கொடுப்பதே ஆகும். போதுமான அளவு வேலை வாய்ப்புக்களை உண்டாக்கிக் கொடுப்பது நாட்டின் பொதுவான பொருளாதார வளர்ச்சியுடன் இணைந்து பின்னப்பட்டிருக்கிறது. அடியோடு வேலையில்லாதவர்கள், அரை குறை வேலை செய்தும், செய்யாமலும் இருப்பவர்கள், குறித்த



காலங்களில்மட்டும் வேலை செய்து மற்ற நாட்களில் வேலையற்றிருப்பவர்கள் ஆகியோரின் எண்ணிக்கை இந்தியாவில் இப்போது 10 கோடியிலிருந்து 15 கோடி. தவிர, தொழில் முன்னேற்றம் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் நம் நாட்டில் தொழில் நுணுக்கமும் போதிய இயல் திறமையும் உள்ள ஆயிரக் கணக்கானவர்கள் வேலை யற்றிருக்கின்றனர். இது ஒரு விசித்திரமான நிலை. நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தொடங்கும்போதே வேலையில்லாதோர் 130 லக்ஷம் நாட்டில் இருந்தனர். இத்துடன் புதிதாக வேலை தேடி, வேலைக்குத் தயாராக இருக்கும் இளைஞர்கள் நான்காவது திட்ட காலத்தில் 280 லக்ஷம் பேர்கள். ஏற்கனவே வேலையற்றிருப்பவர்களுடன் கூடுவார்கள். அதாவது 1975ம் ஆண்டு வாக்கில் குறைந்தபட்சமாக 410 லட்சம் மக்களுக்கு வேலை வாய்ப்புத் தேடிக் கொடுக்க வேண்டிய மலை போன்ற பிரச்னை நம்முன் பயங்கரமாக நிற்கும். இதைத் தவிர பாதி வேலை மட்டும் உள்ளவர்களுக்கும், சில நாட்களில் மட்டுமே வேலை செய்வோர்களுக்கும் முழு வாய்ப்புக்கள் உண்டாக்கித் தர வேண்டும்.

வேலையில்லாப் பிரச்னையைப் பெருவாரியான பொதுப்பணித் திட்டத்தை மேற்கொள்ளுவதன் மூலமே சமாளிக்க வேண்டும். இதை மேற்கொள்ளுவதால்,

(1) அதிகமான மக்களை நாடு முழுவதிலும் உற்பத்தியை அதிகரிக்கும் பணியில் ஈடுபட வைப்பது.

(2) ஆலைகளில் தயாரிக்கப்படும் பொருள்களுக்குக் கிராமப்புறங்களில் அதிகமான கிராக்கியை ஏற்படுத்துதல்.

(3) நாட்டில் ஒரு பகுதிக்கும் மற்ற பகுதிக்குமிடையே உள்ள போக்குவரத்து இன்மை அல்லது குறையை நிவர்த்தி செய்தல்.

(4) விவசாயத்துக்குத் தேவையான பல்வேறு பொருள்களைத் துரிதமாகவும் காலாகாலத்திலும் கிடைக்கச் செய்வதன் மூலம் விவசாய அபிவிருத்தி வேகமாக நடைபெறச் செய்தல்.

(5) மக்கள் தினசரி உபயோகிக்கும் பல்வேறு பொருள்களுக்கும், மோட்டார் தொழிலைச் சார்ந்த உப தொழில்கள், மற்றும் இதர தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களுக்கும் தேவையை விஸ்தரித்தல்.

(6) பொதுவாக, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தப் பாடுபடுவது.

இத்தகைய பெரிய திட்டத்துக்குத் தேவைப்படும் நிதியை அத்தியாவசிய இனமாகக் கருதி, தேசிய பட்ஜெட்டில் தனியாக ஒதுக்கீடு செய்தல் வேண்டும். ஆரம்பக் கட்டத்தில் கூலி பட்டுவாடாவுக்கும், ரஸ்தா போடுவதற்கான உபகரணங்கள், சாதனங்கள் வாங்கவும் ஆண்டுக்கு 250 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்ய வேண்டியிருக்கும். இதன் மூலம் குறைந்தது 10 லட்சம் பேர்களுக்காவது வேலை கிடைக்கும். இதைத் தவிர, 17 லட்சம் பேர்களுக்கு வேலைக்கான வாய்ப்புக்களை உண்டாக்க முடியும்.

கிராமங்களில் வீடு மனைகள் வழங்கவும், வீடுகள் கட்டவும், சாக்கடை, ஏரி, நீர்ப்பாசன மராமத்து, காடு வளர்த்தல், கிராம மின்சார விஸ்தரிப்பு, குடி தண்ணீர் சப்ளை விஸ்தரிப்பு, கிராமப்புற ரஸ்தாக்கள் விஸ்தரிப்பு, கிராம இணைப்புச் சாலைகள் முதலிய இனங்களில் பெரிய பெரிய திட்டங்கள் மேற்கொண்டு செயல்படுத்த வேண்டும். இதன் மூலம் பெருவாரியான மக்களுக்கு வேலை வாய்ப்புக்கள் கிடைக்கும். ஆண்டுதோறும் நகர்ப்புறங்களிலும் கிராமங்களிலும் கோடிக் கணக்கில் ஏழை மக்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வகை செய்ய வேண்டும். வீடு கட்டுவதற்குத் தாராளமாகக் கடன் வசதி அளிக்கப்பட வேண்டும். இதற்காகத் தனியாகவே ஒரு மத்திய வீட்டு வசதி வாரியம் அமைக்கப்பட வேண்டும். சொந்தத்தில் வீடு கட்டிக்கொள்ள விரும்புபவர்களுக்கு நீண்டகாலக் கடன்கள் குறைந்த வட்டி விகிதத்தில் இந்த ஸ்தாபனம் வழங்க வேண்டும்.

படித்து வேலை இல்லாதோர்களுக்கென ஒரு தனி ஸ்தாபனம் அமைக்கப்பட வேண்டும். அவர்களுடைய திறமைகளைப் புதுப்பித்துச் சீராக்கி, உபயோகப்படக் கூடிய வகையில் திருப்பி, சொந்தமாகச் சிறு தொழில்களிலோ, கைத்தொழில்களிலோ, வர்த்தகத்திலோ, போக்குவரத்துத் துறையிலோ, தொழில் ஆரம்பித்து நடத்தி முன்னுக்கு வருவதற்கு நிதி உதவியும், தொழில் நுணுக்க உதவியும் இந்த ஸ்தாபனம் அவர்களுக்கு அளித்து அவர்களை ஊக்குவிக்கும்.

கிராமப்புற வேலை விஸ்தரிப்புத் திட்டங்கள் எல்லாவற்றிலும், படித்து வேலையில்லாதவர்களுக்கான திட்டங்களிலும், ஒதுக்கப்பட்ட நிதியில் கணிசமான பகுதியைச் செலவிடும்போது அதனால் தாழ்ந்த வகுப்பினர்களும் பின்தங்கியவர்களும் சமூகத்தின் ஏழைகளும் அதிகப் பயன் அடையும் வண்ணம் பார்த்துக்கொண்டு செலவு செய்யப்பட வேண்டும்.

மத்திய அரசாங்கத்தில் தனியாக ''பொருளாதார வாய்ப்புத் துறை'' என்று ஒரு இலாகா அமைக்கப்பட வேண்டும். இதற்கு ஐந்தாண்டு காலத் திட்டத்தில் பிரத்தியேகமாக 1000 கோடி ரூபாய் நிதி ஒதுக்கீடு செய்து அதற்குத் தனி பட்ஜெட்டாகக் கொடுத்தல் வேண்டும்.

## 4. உயரும் விலைவாசிகள்

**ப**ண வீக்கமும், உயர்ந்து கொண்டே செல்லும் விலைவாசிகளும், ஏழை மக்கள், மத்திய தர வகுப்பினர், முக்கியமாக நிலையான வருமானம் உள்ள வகுப்பினர், ஆகியோரின் எளிய வாழ்க்கைத் தரத்தை அரித்து அதை மேலும் எளிமையாக்கி விட்டன. உயர்ந்

துள்ள விலைவாசிகளைக் குறைப்பதற்கு எடுத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளில், முக்கியமானது சாதாரண மக்கள் அன்றாடம் உபயோகிக்கும் அவசியமான பொருள்கள் மீது விதிக்கப்பட்டுள்ள உற்பத்தி (Excise) வரிகளை அடியோடு அகற்றுவது அல்லது குறைப்பதாகும். பண வீக்கம் சமூக நீதிக்கு ஒரு பெரிய விரோதி. விலைகளை உயர்த்தும் எந்தவிதமான கொள்கையும் நடவடிக்கையும் கைவிடப்பட வேண்டும். ஸ்திர மதிப்புள்ள நாணயத்தை நிலைநாட்ட வேண்டும். நிதிப் பற்றாக்குறைக்காக நோட்டு அச்சடிப்பதற்கும் விலைவாசி உயருவதற்கான நடவடிக்கைகளுக்கும் முக்கிய காரணம் நிர்வாகத்திற்காகச் செய்யப்படும் அளவுமீறிய அதிகமான செலவும், புகழுக்காகவும் டாம்பீகத்துக்காகவும் லாபகரமாயில்லாத பல திட்டங்களில் ஏராளமாகப் பணம் வீண் செலவு செய்யப்படுவதும் ஆகும். நிர்வாகச் செலவு கணிசமாகக் குறைக்கப்பட வேண்டியது அவசியம். டாம்பீகத் திட்டங்களுக்காகவும் லாபகரமில்லாத இனங்களுக்காகவும் செலவு செய்யப்படும் விரயத்தை நிறுத்தியாக வேண்டும்.

## 5. விவசாயம்

**வி**வசாயம் இந்திய மக்களின் ஆதாரத் தொழில். அப்படித்தான் இன்று வரை இருந்து வந்திருக்கிறது. அப்படியேதான் இனியும் தொடர்ந்து இருக்கும். ஆகவே அதற்கு உரிய முக்கிய இடத்தை அதற்குக் கொடுத்தே ஆக வேண்டும். நிலத்தை நன்றாகப் பயிர் செய்வதற்கும் அதிகமான உற்பத்தியைக் கொடுப்பதற்கும் சமூக அமைப்பில் விரும்பத் தக்கதுமான சிறிய முறை, தனி நிலச்சுவான்தார் முறையும் குடும்ப விவசாய முறையுமாகும். இவை அனுபவத்தில் கண்ட உண்மை. இந்த முறையை ஆதாரமாகக் கொண்டே நம்முடைய கிராமப்புற மக்களின் வாழ்க்கை அமைந்திருக்கிறது. இதைப் பலவீனப்படுத்தும் எதையும் எவரும் செய்யக் கூடாது. எனினும் நிலச் சீர்திருத்தங்கள் வேகமாகவே நிறைவேற்றப்பட்டு அமுலாக்கப்பட வேண்டும். பயிரிடுவோர்களுக்கும் மகசூலில் பங்கு பெறுவோர்களுக்கும் பாதுகாப்பும், நியாயமான, ஸ்திரமான பங்கும், உத்தரவாதமாகக் கிடைக்கச் செய்ய வேண்டும். சொந்த நிலமில்லாத கூலியாட்களுக்குக் குறைந்தபட்சக் கூலி கிடைக்க உத்தரவாதம் அளிக்கப்பட வேண்டும். மேலும் தீவிர விவசாயத்தினால் கிடைக்கும் அதிக மகசூலில் அவர்களுக்கும் உழைப்பின் நியாயமான பங்கு கிடைக்கவும், ஆண்டு முழுவதும் அவர்களுக்கு லாபகரமாக வேலை இருக்கும்படிக்கும் உறுதி அளிப்பதும் அவசியமாகும். விளைச்சல் இன்ஷியூரன்ஸும் கால்நடை இன்ஷியூரன்ஸும், நமது விவசாய மக்களுக்கு அவசியமான வசதிகளாகச் செய்து தரவேண்டும். தாங்கள் உற்பத்தி செய்யும் விளை பொருள்களுக்கு நியாயமான லாபம் கிடைக்கச் செய்ய அவர்களுக்கு ஆதார விற்பனை விலைகள் உத்தரவாதமாக நிர்ணயித்து அளிக்கப்பட வேண்டும்.

## 6. உற்பத்தி

**வே**லையில்லாப் பிரச்னையும் உயர்ந்து கொண்டே செல்லும் விலைவாசிப் பிரச்னையும் அடிப்படை ரீதியில் தீர்க்கப்பட வேண்டுமானால், நாட்டில் உற்பத்தியைத் துரிதமாகப் பெருவாரியாகப் பெருக்க எல்லாவித சாதகமான சூழ்நிலைகளையும் முதன் முதலாக உண்டாக்கிக் கொடுக்க வேண்டும். ஆண்டுக்கு ஆறு சதவீதம் உற்பத்தியின் அளவு உயர வேண்டும் என்பது குறைந்தபட்சக் குறிக்கோள். இதை நிறைவேற்றுவதற்குக்கூட 1970–71 ஆண்டில் தொழிற்சாலைகளிலும் சுரங்கங்களிலும் உற்பத்தியாகும் 6200 கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் 1980–81 வாக்கில் 15,300 கோடி மதிப்புள்ள உற்பத்தியாக உயர வேண்டும். இதற்கு மொத்தம் 12,000 கோடி ரூபாய் முதலீடு செய்யப்படவேண்டும். உதாரணமாக, அலுமினியம் உற்பத்தி இப்போதைய விட ஐந்து மடங்காக உயர்ந்து, ஆண்டுக்கு 500,000 டன் உற்பத்தியாக வேண்டும். பெட்ரோலியம் பொருள்கள் இப்போதுள்ள 14 மில்லியன் டன்களிலிருந்து 45 மில்லியன் டன்களாக உயர வேண்டும். சிமிட்டி 11 மில்லியன் டன்களிலிருந்து 32 மில்லியன் டன்களுக்கு உயர வேண்டும். எஃகு 4 மில்லியன் டன்களிலிருந்து 15 மில்லியன் டன்கள். போக்கு வரத்து மோட்டார் வாகனங்கள் 31,000 லிருந்து 175,000. யந்திர உபகரண சாமான்கள் 28 கோடியிலிருந்து 115 கோடி – இப்படி ஒவ்வொன்றும் கணிசமாக உயர வேண்டும்..

கடுமையான உழைப்புக்கும் தொழில் துணிவுக்கும் அரசாங்கத்தின் கொள்கைகளில் ஊக்கமும் உற்சாகமும் அளித்தால்தான் இந்தியாவின் பொருளாதாரம், விவசாயத் துறையிலாயினும் சரி, வர்த்தக, ஆலைத் தொழில் துறையிலாயினும் விரிவடைந்து முன்னேறும். இப்போதுள்ள நடைமுறையில் இவ்வித ஊக்கம் காணப்படவில்லை. ஊக்கமளிப்பதற்கான பல்வேறு அம்சங்களில் முக்கியமானவை ஸ்திரமான மதிப்புள்ள நாணயம், நியாயமான நேர்முக, மறைமுக வரி விதிப்பு விகிதங்கள், தற்போது பொருளாதார செயல்களை வாட்டி வதைக்கும் சிவப்பு நாடாச் சிக்கல்—இவை போன்றவையாகும். இவை அனைத்தும் குறைக்கப்பட வேண்டும். உற்பத்திப் பெருக்குக்கான அவசியமும் சமூக நீதிக்கான தேவையும் ஊதியங்கள் உற்பத்தித் திறனுடன் இணைக்கப்பட வேண்டியதை வற்புறுத்துகின்றன.

வியாபாரமும், தொழிலும் திறம்படச் செயல்படுவது ''மார்க்கெட் (சந்தை) முறை' தடங்கலின்றி ஒழுங்காக நடைபெறுவதையும் தொழில் வர்க்கத்தினரும், வியாபார வர்க்கத்தினரும் தங்களுடைய சமூக நீதிப்

பொறுப்புக்களை உணர்ந்து செயலாற்றும் மனப்பான்மையையும் ஒட்டி நிற்கிறது. இப்போதுள்ள கண்ட்ரோல்களை எங்கெங்கே உடனடியாக ரத்து செய்ய முடியாதோ, அத்தகைய பெர்மிட் — லைசென்சுகளின் நிர்வாகப் பொறுப்பை, மத்திய அரசாங்கத்திலும் ராஜ்ய அரசாங்கத்திலும் உள்ள பொருளாதார நிபுணர்கள், நிருவாகஸ்தர்களைக் கொண்டு அமைக்கப்பட்ட சுயேச்சை போர்டுகளிடம் ஒப்படைக்க வேண்டும்.

தொழிலில் ஏகபோகப் போக்குக்களைக் கட்டுப்படுத்த வேண்டியதுதான். ஏகபோகப் போக்குக்கு ஒரே பரிகாரம்தான் உண்டு. போட்டா போட்டியை மேன்மேலும் ஊக்குவித்து, வளர்த்து, அம்முறையே நிலவச் செய்யவேண்டும். ஏகபோக நிலைமை தவிர்க்க முடியாதது என்ற நிலைமைகளில் நியாயமான அளவுக்குக் கட்டுப்பாடு அவசியமாகிறது.

## 7. சிறுபான்மை வகுப்பினரும் பின் தங்கிய பகுதியினரும்.

பலதரப்பட்ட மக்கள் பல்வேறு சமயங்கள், பல மொழிகள் உள்ள மிகப் பெரிய நாடாகிய இந்தியாவில் சிறுபான்மை வகுப்பினர், பின்தங்கிய வகுப்பினர் எப்படி நடத்தப்படுகிறார்கள் என்பது மிகவும் அதிகமான முக்கியத்துவம் உள்ளதாகவே இருக்கிறது. எல்லா சிறுபான்மை வகுப்பினருக்கும், மற்றும் ஹரிஜனங்கள், ஆதிவாசிகள், இதர பின்தங்கியவர்கள் போன்று நிர்ப்பந்தங்களுக்குட்பட்டுச் செயலாற்றிக் கொண்டிருப்பவர்களுக்கும் அரசியல் சாஸனத்தில் அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்புகளும் உரிமைகளும் அக்கறைகளும் தீவிரமாக அமுலாக்கப்பட வேண்டும். தீண்டாமை உள்பட எல்லாவிதமான பாரபட்ச அம்சங்களும் அகற்றப்பட வேண்டும். அரசியல் சாஸனத்தில் அந்தந்த வர்க்கத்தினர்களின் சமயத்துக்கும் மொழிக்கும், பண்பாட்டுக்கும் அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்புகள் அனைத்தும் நாட்டு மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுவதுடன் அமல் செய்யப்படவும் வேண்டும். இதன் மூலம் அவர்களிடையே தங்களுக்குப் பாதுகாப்பில்லை என்ற அச்சம் ஏதாவது இருந்தால் அது நீங்கி விடும். அவர்களுடைய குறைகள் தாமதமின்றித் தீர்க்கப்பட வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். எல்லா வாய்ப்புகளிலும் கல்வி பயிலும் எல்லாருக்கும் சமத்துவம் என்ற கொள்கையை முழுமையாக ஏற்பதுடன் நடைமுறையிலும் சட்டப்படியும், நியாயமாகவும் செயல்படும்படி அமுலாக்க வேண்டும். அரசாங்கஅலுவலகங்களில் அவர்களுக்குப் போதிய வேலை வசதிகள் உண்டாக்கித் தரப்படும் என்பது இன்னும் திருப்திகரமாக நிறைவேற்றி வைக்கப்படாத ஓர் அம்சம். இது கவனிக்கப்பட வேண்டிய ஒரு அவசர வேலை.

கல்வித் துறை, வேலை, பொருளாதார நடவடிக்கைகள் போன்றவைகளில் எந்த ஒரு வர்க்கத்தினருக்காவது எதிராகப் பாரபட்சம் காணப்பட்டால் அவற்றைத் திருத்தவும் சமூக, பொருளாதாரத் துறைகளில் சமத்துவம் என்ற கொள்கையைத் தீவிரமாக நிலைநாட்டவும் ஒரு சிவில் உரிமைகள் கமிஷன் (Civil Rights Commission) நியமிக்கப்பட வேண்டும்.

## முடிவுரை

இது ஒரு தேர்தல் அறிக்கை என்று சொல்வதை விட இது செய்முறைக்கு ஓர் அறைகூவல் என்றே சொல்ல வேண்டும். நம்முடைய சுதந்திர விளக்கு மங்கி, கடைசியாக அணைந்து விடுமுன், நிலைமை நம்முடைய பிரயத்தனங்களுக்கு அப்பால் போய்விட்டது என்ற நிலை ஏற்படுவதற்கு முன்பே இந்திய மக்களுக்குச் செயலில் இறங்குவதற்கான ஒரு திட்டம்.

இந்திய மக்கள் அனைவருக்கும் சுதந்திரக் கட்சி விடுக்கும் வேண்டுகோள்: **இத்தேர்தலில் புதிய காங்கிரஸ் கட்சியை ஒதுக்கித் தள்ளி அதைத் தோல்வியுறச் செய்ய வேண்டும்.** ஏனெனில்,

(1) அது இந்திய அரசியல் சட்டத்தை எவ்வகையாலும் நிலைகுலையச் செய்ய முற்பட்டிருக்கிறது;

(2) வெளி நாடுகளிலேயே தங்களுடைய விசுவாசத்தை வைத்துக் கொண்டிருக்கும் கம்யூனிஸ்டுகளின் உதவியை அது நாடுகிறது;

(3) நாடு முழுவதிலும் சட்டம், ஒழுங்கு, அமைதியையும் அது நிலைநாட்டத் தவறிவிட்டது.

(4) பொருளாதாரத் துறையில் காலத்துக்கு ஒவ்வாத, தற்கொலைக்கு ஒப்பான கொள்கைகளைக் கடைப்பிடித்துத் துரிதமான முன்னேற்றம் ஏற்படவொட்டாது அது தடுத்துக் கொண்டிருக்கிறது.

மக்களின் சக்தியைப் பயனுள்ளதாக உத்வேகமூட்டி எழுப்பவும், அதன் மூலம் அவர்களுடைய உழைப்பின் பலனை அவர்கள் அடைவதற்கும் சுதந்திரக் கட்சி தன்னால் முடிந்ததை எல்லாம் செய்யும். திறமையும் கடும் உழைப்பும் அதற்குரிய சம்மானத்தைப் பெறும். கண்டுபிடிப்புக்களுக்கு ஊக்கம் அளிக்கும். ஏழைகளும், ஒடுக்கப்பட்டவர்களும் பாதுகாக்கப்படுவார்கள். எதிர்காலம் நம்பிக்கையுள்ளதாக அவர்களுக்கு இருக்கும் என்ற நிலைமையை ஏற்படுத்தும். இவை எல்லாம் நடைபெற வேண்டுமானல், நாட்டின் ஜீவனை உறிஞ்சிக் கொண்டிருக்கும் இப்போதுள்ள அரசாங்கத்தை முதலில் அகற்றியாக வேண்டும். அதற்குப் பிறகுதான் மிகவும் தாமதமாகி விட்ட புனர்நிர்மாண வேலை மேற்கொள்ளப்பட வேண்டும். மக்கள் கண்களின் கண்ணீரைத் துடைக்க வேண்டும் என்று காந்திஜி கண்ட கனவை நினைவாக்க, அப்போதுதான் நாம் செயலில் இறங்க முடியும்.



Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam



துர்க்கா 'பூஜையின் பொழுது கண்ணாடிக் கடைக்காரருக்காகத் தயாராகும் வாழ்த்து படம்.

நன்றி — 'மாயா' (ஹிந்திப் பத்திரிகை.)

— இப்பகுதியை இதழிலிருந்து பிரித்தெடுத்து இங்கே மடித்துக் கொள்ளவும் —

# சித்திரச் சிரிப்பு



அன்பளிப்புக் கல்கி





"அலமாரிக் கதவைச் சுலபமாகத் திறக்க முடியவில்லையே!"



"இனி நாங்கள் ஒருவருக்கொருவர் இப்படிச் சண்டை போட மாட்டோம் என்று கை கூப்பி வணங்குகிறேம். ஆண்டவா!"

தேர்தல் நெருங்குகிறதே. அதற்காகத் தலைவர் செய்த யோசனை!







4. தேவைப்பட்ட பொழுது ஹீரோ இமயத்தின் சிகரத்திலேயே ஏறி எத்தனையோ இன்னல்களைத் தாண்டுகிறன்.

5. எல்லா வகையிலும் ஏமாற்றமுற்ற கதாநாயகி தற்கொலை புரிந்து கொள்கிறள்!

6. அப்புறம் ஒரு வில்லன் தோன்றுகிறர்.



7. காதலர் இருவரும் சொர்க்கத்தில் சேர்ந்து இன்புறுகிருர்கள். பார்ப்பவர்களையும் இன்புற வைக்கிருர்கள்.



# திரைக் கதை – சீனரியோ

1. ஏதும் அறியா இரண்டு ஜீவன்கள் காதல் கொள்ளுகின்றன.



2. கையில் பேனாக் கத்தி கூட இல்லாமல் புலியைக் கொன்று, காதலியின் உள்ளத்திலே இடம் பெறுகிறார்.



3. பல பிறவிகள் எடுத்து ஒருவனையே காதலித்து, அவன் பிரிவால் கண்ணீர் பெருக்கும் ஆரணங்கு!





''ராணி!'' என் மேல் ஆணையிட்டுச் சொல்லு! இது கூந்தல் அலங்காரம்தானே? தலைப்பா இல்லையே?''

அழகான விதமாகப் போட்டோ பிடிப்பதென்றால் இலேசா?

●

பூங்காவிலே ஒரு காட்சி!





''ஐயாவை இப்பொழுது பார்க்க முடியாது. எழுதும் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறார்!''



''பலே, பலே! தினமும் இப்படியே கூந்தல் அலங்காரம் செய்து கொள்!''

●



''நீர்மேல் நடக்கிற யோகியானாலும் இன்னும் செருப்பாசை போகலேடா!''



''நம்ம பையன் எருமைமாடு சவாரி செய்யும்போது மோட்டார் சைக்கிள் ஓட்டுவதாக விளையாட்டாக எண்ணிக் கொள்கிறான்!''

***

''நான் கண்ணாடி போடாமலேயே கூறுகிறேன். உங்கள் கைரேகையில் உங்கள் வருங்காலம் பளிச்சென்று தெரிகிறது!''





ரொம்ப தூரம் போய் விட்டால் யார் அம்பைப் பொறுக்கிக் கொண்டுவர நடப்பது?

***

நடக்கும் பொழுது யாராவது மோதி விட்டால்....? அதற்காகத்தான் இந்த ஏற்பாடு!





"நீ எப்படி நான்கு குடங்களை ஒரே சமயத்தில் தூக்குகிருய் என்பது இப்பொழுதுதான் புரிகிறது."



"யோசிக்காதே! நானும் உன்னேடு குதித்து விடப் போகிறேன்."



"பீடாவிலும் மாடர்ன் ஆர்ட் இப்படியும் போடலாம்!"



"ஆண்டவன் உனக்கு உயர்ந்த பதவி கொடுக்கட்டும்!"



''இந்தப் புடவையை உடுத்திக் கொண்ட பின்பும் என் முகத்தைச் சந்திரனுக்கு ஒப்பிடத் தோன்றவில்லை அம்மா அவருக்கு!''



கீல், தாழ்ப்பாள் முதலியன விற்கும் கடையின் முதலாளி என்பதை இப்படி விளம்பரப் படுத்திக் கொள்ளணுமா!



''ஒளிபடைத்த கண்கள் அவளுக்கு...!''



''ஒரு டஜன் பலாப் பழமும் என்ன விலை சொல்லு!''



"என்னடா கஷ்டகாலம்! குண்டு வீசுகிற பொழுது இப்படியா போலீஸ் கையும் மெய்யு மாகப் பிடித்துக் கொள்ள வேண்டும்!"



"வேலை முடிந்ததும் மூன்றுவது கையை அடியோடு எடுத்து விடுவேன்!"



சரியான ஜோடி!



"உன் கப்பரையை உடனே மாற்றிக் கொள். அதற்காகத்தான் நான் பிச்சை போடுகிறேன் உனக்கு!"

# பிரும்மசாரியின் சமையல்!

1. அரிசி பொறுக்குகிறார்.
2. காய்கறி நறுக்குகிறார்.
3. அடுப்பு பற்ற வைக்கிறார்.
4. தாளித்துக் கொட்டுகிறார்.













5. மாவு சலிக்கிறார்.
6. ரொட்டி இடுகிறார்.
7. அவ்வளவும் செய்து களைத்துப் போகிறார்.
8. கடைசியில் ஹோட்டல் சாப்பாடு அற்புதம், அபாரம்.





# எங்கள் ஊழியர் தங்கள் வசதிகளைப் பெருக்கிக் கொள்ள நாங்கள் உதவுகிறோம்



எங்கள் ஊழியர்களுக்கு ஏராளமான வசதிகள் கிடைக்கச் செய்வதே எங்கள் நோக்கம். எனவே பத்திரமான வேலையோடு அவர்கள் நல்வாழ்வுக்கான எல்லா வசதிகளையும் பெற்று மகிழ்கிறார்கள்.

அது மட்டுமல்ல.

ஊழியர்களின் முன்னேற்றத்துக்கான அவசியத்தை நாங்கள் நன்குணர்ந்து அவர்களுக்கு வேலை உயர்வுக்கான வாய்ப்புகளை அளிக்கிறோம்.

பாரபட்சமின்றி பதவி உயர்வு அளிக்க தகுதிப் பரீட்சைகள் நடத்துகிறோம். அதற்காக ஜம்ஷெட்பூரில் உள்ள எங்கள் தொழில்நுட்பப் பயிற்சி நிலையத்தில் இலவச பயிற்சி அளிக்கிறோம். இதுவரை 10.000 பேர் இவ்வாறு பயிற்சி பெற்றுள்ளனர்.

எங்கள் பலம், எங்களுடைய உருக்கில் இருப்பதைப் போலவே, எங்கள் ஊழியரிடமும் இருக்கிறது.

**டாடா ஸ்டீல்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon